

















# Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.

Because it's never too early to be a hero.



ORISSA
The soul of India

இன்று ஒரிஸ்ஸா எனப்படும் மாநிலம் முன்பு கலிங்கம் என்றும் உத்கல் என்றும் அழைக்கப்பட்டது.

பழங்காலம் முதல் இங்கு வழிபடப் படும் கடவுள் ஜகன்நாதர். இவருடன் இவரது தமையன் பலபத்திரரும் தங்கை சுபத்ராவும் சேர்ந்திருப்பதும் இவர்களுக்குப் பல விதங்களில் வழிபாடுகள் நடத்தப்படுவதும் குறிப்பிடத்தக்கதாகும்.



இவற்றில் சில ஜகன்நாதரை மானிடராகக் கருத வைக்கின்றன. அவருக்குக் காய்ச்சல் வந்திருப்பது ஒரு வழிபாடாக நடத்தப்படுகின்றது.

ஆடி மாதம் கிருஷ்ண பட்சத்தின்போது இந்த மூன்று விக்கிரகங் களும் மறைவாக வைக்கப்படுகின்றன. அந்த மூவரையும் குளிப்பாட்டியதும் ஜலதோஷம் பிடித்து விட்டதாகவும் ஒரு வழிபாடு! இவர்களது திருஉருவங்கள் மரத்தால் ஆனவை. எனவே இவற்றின் வண்ணங்கள் மங்கிப் போகும்போது திரைமறைவில் வழக்கமாக இவற்றிற்கு வண்ணம் தீட்டுபவர்கள் தம் பணியைச் செய்கிறார்கள். இப்பணி வம்ச பரம்பரையாகத் தொடர்வதாகும்.

முன்காலத்தில் இந்தக் கலைஞர்கள் இந்த விக்கிரகங்களின் திருஉருவங்களை 'கான்வாஸ்' போன்ற கெட்டித் துணிகளில் வரைந்தும் வந்தார்கள். இவ்வாறு தயாரிக்கப்பட்டது 'பட்டசித்ர' என அழைக்கப் பட்டது. பட்ட என்பது சுண்ணாம்பு, புளியங் கொட்டைத் தூள், கோந்து முதலியன சேர்ந்த கலவை தடவப்பட்ட துணி. இது கனமாக இருக்கும். இதன் மீது சித்திரம் வரையப் படுவதால் இது 'பட்டசித்ர' எனப் பெயர் பெற்றது.

இதைத் தயாரிக்கும் கலைஞர்கள் ஜகன்நாதர் கோயில் கொண்டுள்ள புரியிலும் அதன் அக்கம்பக்க சிற்றூர்களிலும் வசித்து வாழும் எல்லாக் குடும்பத்தினரும் இந்தக் கலையில் கைதேர்ந்தவர்கள். உலகிலுள்ள கலாரசிகர்களெல்லாம் 'பட்டசித்ரா'வைப் பாராட்டுகிறார்கள்.

### வினாக்கள்

1. ஸ்ரீ ஜகன்நாதர் ஆலயம் ஒரிஸ்ஸாவில் எந்த நகரத்தில் உள்ளது?

.....................................................

2. இந்தக் கடவுளின் தொடர்பாக நடக்கும் பிரபல திருவிழாவின் பெயர் என்ன?

.....................................................

3. இந்த கம்பீரமான ஆலயத்தைக் கட்டிய மன்னர் யார்?

.....................................................

இப்போட்டியில் 14 வயதுக்குட்பட்டவர்களே கலந்து கொள்ளலாம். உங்கள் விடைகளைத் தெளிவாகக் கோடிட்ட இடங்களில் எழுதி கூப்பனை நிரப்பி இந்த முகவரிக்கு **பிப்ரவரி 28, 2003**க்குள் அனுப்பவும்.

Orissa Tourism Quiz Contest - 3
Chandamama India Limited,
No.82, Defence Officers' Colony,
Ekkatuthangal, Chennai - 600 097.

பெயர் : ........................................ வயது : ....................

முகவரி : ........................................ பின்கோடு : ....................



*One winner picked by Orissa Tourism in each contest will be eligible for 3 days, 2-night stay at any of the OTDC Panthanivas, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism employees and their family members. The judges' decision will be final.*
*Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar-751 014. Ph:(0674)2432177, Fax:(0674) 2430887, e-mail:ortour@sancharnet.in. Website:Orissa-tourism.com*



இந்தியப் புராதனக் கதைகள் 26



நவீன வேதாளக் கதை 19



மர்மக்குளம் 13



விநாயகர் 45



## பொருளடக்கம்


★ கிழவிக்கு நன்றி ...11 ★ மர்மக் குளம்-12 ...13
★ உயர்ந்த உபசரிப்பு *(நவீன வேதாளக் கதை)* ...19
★ இந்தியாவின் இன்முகம் ...25 ★ அழிவைத் தேடிக் கொண்ட அரக்கன் *(இந்திய புராதனக் கதைகள்)* ...26
★ பாட்டியும் பேரனும் ...29 ★ செய்திச் சுடர் ...33
★ பெயர் பெற வழி! ...34 ★ வாக்கை நிறைவேற்றிய மகள் *(ராஜஸ்தான் கிராமியக் கதை)* ...38
★ நம் இந்தியா *(வினாக்கள்)* ...44 ★ விநாயகர் ...45
★ தம்பியின் தான குணம் ...51 ★ மிஷ்கினின் அதிர்ஷ்டம் *(பாரசீக நாட்டுப்புறக் கதை)* ...52
★ தலை வணங்கினார்! ...57
★ வீரதீர பராக்கிரமன்-23 ...60
★ கேளிக்கை நேரம் ...64
★ போட்டோ வாக்கியப் போட்டி ...66



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில்
விளம்பரங்களை வெளியிடத்
தொடர்பு கொள்ள வேண்டிய
முகவரி:
சென்னை
Ph : 044 - 2231 3637
2234 7399
e-mail : advertisements@chandamama.org
டில்லி
மோனா பாட்டியா
Ph : 011 - 651 5111
656 5513 / 656 5516
மும்பை
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022 - 266 1599
266 1946 / 265 3057

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# நதிகளால் நாட்டின் ஒருமைப்பாடு

பரந்த நம் பாரத நாட்டில் நூற்றுக்கணக்கான நதிகள் பாய்ந்து குடிக்க நீரையும் விவசாயத்திற்கும் மற்ற தொழில்களுக்கும் தேவைப்படும் தண்ணீரையும் அளித்து வருகின்றன. பருவகால மழையால் இந் நதிகளில் நீர் பெருக்கு எடுத்து ஓடுகிறது. ஆனால் நம் துரதிஷ்டவசமாக இயற்கை வளத்தைச் சிதைத்து மழைபெய்வதைக் குறைத்து வருகிறோம். இதனால் ஆறுகளில் நீர்ப்பெருக்கு குறைவதோடு நிலத்தடிநீர் மட்டமும் தாழ்ந்து கொண்டே போகிறது. இதனால் நாம் தொல்லைப்படுகிறோம். நம் அண்டை மாநிலங்களில் நிறையத் தண்ணீர் இருக்கிறது எனச் சச்சரவு செய்கிறோம்.

இந்தப் பிரச்சினை பல ஆண்டுகளாக இருந்து வருகிறது. மாநிலங்களிடையே இதனால் ஏற்படும் சச்சரவு, சண்டைகளைத் தீர்க்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. நாட்டின் எல்லா நதிகளையும் இணைத்து எல்லாப் பகுதிகளுக்கும் சீராகத் தண்ணீர் கிடைக்கச் செய்யலாம் என்று பல ஆண்டுகளுக்கு முன்பே ஒரு யோசனை தெரிவிக்கப்பட்டது. அண்மையில் மத்திய அரசு 30 பெரிய நதிகளை 10 அல்லது 15 ஆண்டுகளுக்குள் இணைத்து விடுவது என்று தீர்மானித்தும் உள்ளது.

நம் நாட்டில் மக்கள் பலமதத்தவர்கள். பல மொழிகளைப் பேசுபவர்கள். இவ்வளவு வேற்றுமைகள் இருந்தும் நாம் ஒற்றுமையுடன் இருந்து வருகிறோம். இந்த நாட்டுப்பற்றுதான் நம்மை கஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை இணைத்து வைத்திருக்கிறது. நம் நதிகளின் இணைப்பால் இந்த ஒற்றுமை மேலும் உறுதிப்படும். இதனை முழு மனதுடன் யாவரும் வரவேற்போம்.

ஆசிரியர் : விஸ்வம்
Visit us at : http://www.chandamama.org

**இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்**

# இந்திய மாவீரர்கள் – 17

நம் நாட்டில் நிறைய விளையாட்டு வீரர்கள் உள்ளனர். இங்கு சிலரைப் பற்றிய வினாக்கள் உள்ளன. விடைகளைக் கூறுங்கள்.

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. பூசானில் 2002ல் நடந்த ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் நான் கோல்ஃப் தனிநபர் ஆட்டத்தில் தங்கப் பதக்கம் பெற்றேன். நான் யார்?

------------------------------------------------

2. துப்பாக்கி சுடுவதில் அர்ஜுன் விருதைப் பெற்ற நான் 2002 காமன்வெல்த் விளையாட்டுப் போட்டிகளில் ஒரு புதிய சாதனை படைத்தேன். நான் யார்?

------------------------------------------------

3. இந்நூற்றாண்டின் உயர் கிரிக்கெட் வீரராக அண்மையில் நான் தெரிந்தெடுக்கப்பட்ட நான் யார்?

------------------------------------------------

4. சென்னையில் டென்னிஸ் பயிற்சி கழகம் நடத்தும், பத்மஶ்ரீ விருது பெற்ற நான் தொலைக்காட்சித் தொடர்கள், திரைப்படங்கள் வாயிலாக டென்னிஸ் விமர்சனங்கள் புரிபவன். நான் யார்?

------------------------------------------------

5. ஃபார்முலா 3 கார் ஓட்டச் சாம்பியன் போட்டியில் கலந்து கொண்ட முதலாவது இந்தியன் நான். மிக வேகமான இந்தியர் என அழைக்கப்படும் நான் யார்?

------------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ........................................

........................................................

........................................................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ........................................................

........................................................

பின்கோடு: ........................ போன்: ........................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி–17**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி மார்ச் 5, 2003

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. * எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்



# பீதர்கானிகா

நீங்கள் ஜன நடமாட்டம் இல்லாததும் சந்தடி குறைந்ததுமான இடத்திற்குப் போக விரும்பினால் அது ஒரிஸ்ஸா மாநிலத்திலுள்ள பீதர்கானிகாதான். இது 600 சதுர கி.மீ பரப்பளவில் பரவிய பல தோப்பு துறவுகளைக் கொண்டது.



இத்தகைய இயற்கை அமைப்புகளில் இது இந்தியாவில் இரண்டாவது இடத்தை வகிக்கிறது. 60 வகையான மரம் செடிகளுள்ள தோப்புகளை இங்கு காணலாம்.

பீதர் கானிகா தேசியப் பூங்காவும் சரணாலயமும் ஆகும். இது பல அபூர்வப் பறவைகளின் புகலிடமாக உள்ளது. 170க்கும் மேலாக உள்ள பலவிதப் பறவை வகைகளை இங்கு காணலாம். பீதர்கானிகா மூன்று பக்கங்களில் நதிகளால் சூழப்பட்டும் நான்காவது பக்கத்தில் கடலையும் கொண்டுள்ளது. இதில் பல ஓடைகள் பாறைகளைக் குடைந்து கொண்டு வங்கக் கடலை அடைகின்றன. இவை சிறு சிறு தீவுத்திடல்களையும் உருவாக்கியுள்ளன.

கடல் அலைகள் உயர்ந்து இப்பகுதியில் நீரை நிரப்பிவிட்டு ஓய்ந்தபின் பார்த்தால் இங்கு நண்டுகளையும், பலவகை மீன்களையும் மற்றும் பல நீர்வாழ் உயிரினங்களையும் காணலாம்.

மற்றொரு சிறப்பு ஆலிவ் ரிட்லிடாடில் எனப்படும் ஆமைகள் வருடத்திற்கு இரு முறை இவ்வகை ஆமைகள் வந்து முட்டைகளை இடுகின்றன. இப்பகுதிக்குச் செல்ல முன் அனுமதி பெற வேண்டும். இங்கு விசைப்படகுகள் வாடகைக்குக் கிடைப்பதால் அவற்றில் உல்லாசமாகச் சென்று களிக்கலாம்.

**இதை அடைய வழி :** புவனேஸ்வரத்திலிருந்து 190 கி.மீ தொலைவிலுள்ள சந்துபாலி வழியாகவோ கேந்திர பாராவிலிருந்து 30 கி.மீ தொலைவிலுள்ள ராஜநகர் வழியாகவோ அல்லது ராஜ்நகரிலிருந்து 2.5 கி.மீ தொலைவிலுள்ள குப்தி வழியாகவும் சென்று இதை அடையலாம்.



# கிழவிக்கு நன்றி

பாலூரிலிருந்து புறப்பட்ட இளைஞன் புருஷோத்தமன் மருதூரை அடைந்தபோது நன்கு இருட்டி விட்டது. அன்றைய இரவை எங்கே கழிப்பது என யோசித்தபோது ஒரு சிறு வீட்டைக் கண்டு அதன் கதவைத் தட்டினான்.

சில நிமிடங்களுக்குப் பிறகே கதவைத் திறந்து கொண்டு ஒரு கிழவி வெளியே வந்தாள். அவளைப் பார்த்த அவன், ''பாட்டி! நான் பாலூரிலிருந்து ஏதாவது வேலை கிடைக்குமா என்று இந்த ஊருக்கு வந்திருக்கிறேன். மிகவும் பசியாக இருக்கிறது,'' என்றான். கிழவியும் அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு ''சரி. உள்ளே வா!'' என்றாள். அவனும் உள்ளே போனதும் கிழவி ஒரு தட்டில் உணவை வைத்து அவனிடம் கொடுத்தாள்.

அவனும் அதைச் சாப்பிட்டு விட்டு ''பாட்டி! இன்றிரவு இங்கே இருந்துவிட்டு நாளைக் காலையில் போய்விடுகிறேன். வீட்டில் வேறு யாரும் இல்லையா?'' என்று கேட்டான். கிழவியும் ''என் மகனும் மருமகளும் வெளியூருக்குப் போயிருக்கிறார்கள். நாளைக்குத் தான் வருவார்கள்,'' என்றாள். அவனும் ''சரி, நான் இங்கே ஓரமாகப் படுத்துக் கொள்கிறேன்,'' என்று சொல்லி தன் மேல் துண்டை விரித்துப் படுத்தான். ஆனால் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. அப்போது கிழவி அங்கிருந்த பீரோவைத் திறந்து நகைப் பெட்டியை எடுத்துப் பார்த்துவிட்டு மீண்டும் அதற்குள் வைத்து பீரோவைப் பூட்டி சாவியை எடுத்துக் கொண்டு போவதையும் அவள் அதைத் தன் தலையணைக்கு அடியில் வைத்துக் கொண்டு படுத்துவிட்டதையும் அவன் கவனித்தான்.

அப்போது அவன் மனம் அந்த நகைப் பெட்டியைத் திருடிக் கொண்டு போய்விட எண்ணியது.

இச்சமயத்தில் யாரோ இருவர்

- கௌரிநாதன் -

ஜன்னலருகே நின்று தாழ்ந்த குரலில் பேசுவதை அவன் கேட்டான். அவர்களில் ஒருவன் ''கிழவி நகைகளை எல்லாம் நகைப் பெட்டியில் வைத்து பீரோவில் வைத்திருக்கிறாள். பீரோ சாவி அவளிடம் இருக்கிறது. அவளை அடித்துப் போட்டுவிட்டு சாவியை எடுத்து பீரோவைத் திறந்து நகைப் பெட்டியை எடுத்துக் கொண்டு ஓடிவிடலாம்,'' என்றான்.

அதைக் கேட்ட புருஷோத்தமன் மனம் கிழவியைத் திருடர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டும் என எண்ணியது. எனவே மெதுவாக எழுந்து கிழவியருகே போய் அவளை எழுப்பினான். அவளிடம் திருடர்கள் இருவர் திருட வரப்போவதைக் கூறி என்ன செய்ய வேண்டும் என்பதையும் சொன்னான்.

அதன்படி அவன் வாசல் கதவைத் திறந்து கிழவியுடன் வீதிக்கு வந்து நடந்து சென்றான். கதவு திறந்து கிடப்பதைக் கண்டு திருடர்கள் மகிழ்ந்து போய் அந்த வீட்டிற்குள் சென்றார்கள். புருஷோத்தமன் உடனே ஓடி வந்து வாசல் கதவை மூடி வெளிப்புறம் தாளிட்டான். திருடர்கள் வீட்டினுள் அடைபட்டு விட்டார்கள். கிழவி 'திருடன்! திருடன்!!' எனக் கூவவே, அக்கம் பக்கத்தவர் ஓடி வந்தார்கள். அவர்கள் வாசல் கதவைத் திறந்து கொண்டு 'திபுதிபு'வென்று உள்ளே நுழைந்து திருடர்களைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் காவலதிகாரியிடம் ஒப்படைத்தார்கள்.

அப்போது புருஷோத்தமன் கிழவியிடம் ''பாட்டி! திருடர்கள் வருமுன் உன் நகைகளைத் திருட நானே எண்ணினேன். ஆனால் திருடர்கள் உன்னை அடிக்கப் போவதாகக் கூறியது என் மனதை மாற்றிவிட்டது,'' என்றான்.

கிழவியும் பரிவுடன் அவன் முதுகைத் தடவி ''தம்பி! நீ மனம் மாறி எனக்கு உதவி செய்தாய். மனம் மாறிய நீ நல்லவனே. என் மகனின் வயலில் நீ வேலை செய்ய ஏற்பாடு செய்கிறேன். வேலைக்காக நீ இனி அலைய வேண்டாம்,'' என்றாள். இளைஞன் ஆனந்தக் கண்ணீர் வடித்து கிழவிக்கு நன்றி செலுத்தினான்.






# மர்மக் குளம்

## 12

(தன் எதிரி கிருபாணஜித்தன் மரண மரத்திடம் சிக்கி இறந்ததைக் கண்ட ஜெயசீலன் சித்தசாதகனுடன் மர்மக் குளத்தைத் தேடிக் கொண்டு சென்றான். சர்ப்பநகன் அவர்களின் பின்னால் சென்றான். மூவரும் சென்று கொண்டிருக்கையில் ஒரு குகையின் வாசலில் மனிதக் குரங்கை மகரகேதுவின் விசித்திர யானை தாக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அப்போது - )

அந்த விசித்திர யானையைக் கண்டு ஜெயசீலன் ஆச்சரியப்பட்டான். அப்போது சர்ப்பநகன் ''ஜெயசீலா! இது மகரகேதுவின் வாகனம். மிகவும் சக்தி வாய்ந்தது. மகரகேதுவோ சர்வ சக்திமான்,'' என்றான்.

அதுகேட்டு சித்தசாதகன் ''உன் மகரகேதுவின் பலம் எவ்வளவு என்பது எங்களுக்குத் தெரியும். முதலில் அந்த விசித்திர யானையைக் கொன்று விட்டு அந்த மனிதக் குரங்கை என் வாகனமாக ஆக்கிக் கொள்ளப் போகிறேன்,'' என்று கூறியவாறே தன் திரிசூலத் தைத் தூக்கினான்.

அப்போது ஜெயசீலன் சித்தசாதகனிடம் ''சாதகா! பொறு, அவசரப்படாதே! நாம் மர்மக் குளத்தைக் காண ஓர் அரிய வாய்ப்பு கிடைத்துள்ளது. நாம் மகரகேதுவிடம் நயமாகப் பேசி மர்மக்குள மகேஸ்வரனைக் காண வேண்டும்,'' என்றான்.

சித்தசாதகனும் ''அந்த மகரகேது இன்னமும் உயிருடன் இருப்பதாக



நினைக்கிறாயா? வாளாலும் கத்தி யாலும் படுகாயப்பட்ட அவன் எனறோ இறந்து போயிருப்பானே. அவன் இறந்துவிட்டதால் தான் இந்த விசித்திர யானை கண்டபடி அலைந்து திரிகிறது,'' என்றான். அப்போது விசித்திர யானை தன் துதிக்கையால் மனிதக் குரங்கைப் பற்ற முயல, அக்குரங்கு பயங்கர மாகக் கத்தியது. அவை கடுமை யானச் சண்டை போட்டுக் கொண் டிருந்தன. விசித்திர யானை மனிதக் குரங்கைப் படாதபாடு படுத்திக் கொண்டிருந்தது.

ஜெயசீலனின் பார்வை அச் சண்டையைப் பார்த்ததோடு சற்று உயரமான இடத்தில் நான்கு பேர்கள் நின்று அதை கவனிப்பதையும் கண் டது. உடனே அவன் ''சாதகா! அங்கே பார்!'' என்று கூறி அவர்களைச் சுட்டிக் காட்டினான். சாதகனும் அவர்களைப் பார்த்தவாறே ''ஆ! மகரகேது அங்கே நிற்கிறானே!'' என்று கூவி ஆச்சரியப் பட்டான். அந்த நால்வரும் ஜெய சீலனையும் சித்தசாதகனையும் உற்றுப் பார்த்தார்கள்.

மகரகேது தன்னுடன் நின்ற குறுந்தாடிக்காரனுக்கு ஜெயசீலனை யும் சித்தசாதகனையும் சுட்டிக்காட்டி ''மருத்துவ மணியே! அவன் தான் ஜெயசீலன். அவனருகே ஈட்டியுடன் இருப்பவன் சித்தசாதகன். இன் னொருவன்தான் நம் சர்ப்பஸ்வரனின் சகோதரன் சர்ப்பநகன்,'' என்றான்.

அப்போது சர்ப்பஸ்வரன் ''என் அண்ணன் சர்ப்பநகனா! அவன் உயி ரோடா இருக்கிறான்!'' எனக் கூறி வியப்படைந்தான். மகரகேதுவும் ''அவர்கள் ஒருவிதத்தில் நம் எதிரி களே. ஆனால் மர்மக்குள மகேஸ்வர னின் கட்டளைப்படி நாம் அவர்களது நண்பர்களைப் போல நடிக்கவே வேண்டும், தெரிந்ததா?'' எனக் கூறி மருத்துவ மணியைப் பார்த்தான்.

மருத்துவமணியும் ''மகரகேது! நீ அந்தப் பரந்த வெளியில் என்ன நடக்கிறது என்று பார். மனிதக் குரங்கு களைத்துப் போய்க் கொண்டிருக் கிறது. ஆனால் உன் வாகனமான விசித்திர யானையை ஜெயசீலன் தன் வாளால் தாக்கிக் கொண்டிருக்கிறான். உன் வாகனம் இறந்துவிடும் போலி ருக்கிறதே!'' என்றான்.

அதைக் கேட்டு மகரகேது ''ஆ! மர்மக்குள மகேஸ்வரா! நான் போய் அதைக் காப்பாற்றுகிறேன்,'' எனக்

கூறியவாறே அந்த உயரமான இடத்திலிருந்து கீழே குதித்து ஓடினான். மற்றவர்களும் அவன் பின்னால் ஓடிச் சென்றார்கள். அவர்களில் ஒருவனின் வலது கால் மரத்தாலானது.

தான் வாகனமாக்கிக் கொள்ளப் போகும் மனிதக் குரங்கு படும் பாட்டைக் கண்டு சித்தசாதகன் அதை விசித்திர யானையின் பிடியிலிருந்து மீட்க ஓடினான். அப்போது சர்ப்பநகன் ''ஐயா! அந்த விசித்திர யானையைத் தாக்கினால் நீங்கள் ஒழிந்தீர்கள். மகரகேது உங்களைப் பந்தாடி விடுவார். ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் சிரித்தவாறே, ''சாதகா! இவன் சொல்வதைப் பொருட்படுத்தாதே! மகரகேதுவைப் பற்றி நமக்குத் தெரியாததையா இவன் சொல்கிறான். நீ பேசாமல் உன் வேலையைச் செய்!'' என்றான்.

சித்தசாதகனோ, ''உன் மகரகேதுவால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. என் திரிசூலத்தின் ஒரே குத்தால் அவனை எமலோகத்திற்கு அனுப்பி விடுவேன்.அதைத் தெரிந்து கொள்!'' எனக் கூறியவாறே சென்றான்.

இதற்குள் ஜெயசீலனே இரு மிருகங்களும் சண்டை போடும் இடத்தை அடைந்துவிட்டான். மனிதக் குரங்கைப் பிடிக்க முயன்ற விசித்திர யானையின் துதிக்கையைத் தன் வாளால் அவன் தாக்கினான். அந்தத் தாக்குதலைப் பொறுக்க முடியாமல் அந்த யானை அலறியது. அது தன்னைத் தாக்கிய ஜெயசீலனின்



பக்கம் திரும்பியது. அப்போது அவன் சட்டென்று தாவி அதன் முதுகின் மீது உட்கார்ந்துவிட்டான். தன்னைத் தாக்கியவன் தன் முதுகின் மீது ஏறி உட்கார்ந்ததை உணர்ந்த அந்த விசித்திர யானை அவனைப் பிடிக்கத் தனது துதிக்கையை உயர்த்தியது. ஜெயசீலன் அதனைத் தன் இடது கையால் பலமாகப் பிடித்துக் கொண்டு அதன் மத்தகத்தில் வலது கையால் ஓங்கி ஒரு குத்து விட்டான்.

அதைப் பார்த்துக் கொண்டே மகரகேது வேகவேகமாக அங்கு ஓடி வந்தான். அவனைக் கண்ட ஜெயசீலன் ''ஓ! மகரகேதுவா! வா, வா!! உன் வாகனத்தை முதலில் ஒழித்துவிட்டுப் பிறகு உன் கதையை முடிக்கிறேன். இனிமேல் எனக்கு உன்னால் எந்தத் தொல்லையும் கொடுக்க முடியாது,'' என்றான் பலமாகச் சிரித்தவாறே.

மகரகேது இரு கைகளையும் கூப்பி ''ஜெயசீலா! அதை மட்டும் கொல் லாதே! நம் விரோதத்தை மறந்து நாம் நண்பர்களாகிவிடுவோம். நீ மர்மக் குளத்தைக் காணத் தானே வேண்டும். அதற்கான வழியை நான் காட்டு கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் ''ஓ! நீ உண்மையிலேயே எங்களுக்கு மர்மக் குளத்தை அடைய வழி கூறப் போகி றாயா அல்லது வாய்ப்பந்தல் போட்டு ஏமாற்ற முயல்கிறாயா?'' என்று கேட்டான். மகரகேதுவும் ''என்னை நம்பு. நான் வழிபடும் மர்மக்குள மகேஸ்வரனின் மீது ஆணை வைத் துக் கூறுகிறேன். உங்களுக்கு அந்த வழியைக் காட்டுகிறேன். ஆனால் என் வாகனத்தை மட்டும் ஒன்றும் செய்யாதே. விட்டுவிடு!'' என்று கெஞ்சினான்.

ஜெயசீலனும் யானையின் துதிக் கையை விட்டுவிட்டுக் கீழே குதித் தான். அவன் மகரகேதுவிடம், ''நீ எனக்கு அதற்குப் போகும் வழியை மட்டும் சொன்னால் போதாது. மன்னர் கனகாட்சரரின் மகனும் மகளும் விடுதலையாக வேண்டும். அதற்காக உன்னைப் பணயக் கைதி யாக இந்த குகைக்குள் அடைத்து வைக்கப் போகிறேன். இந்த செய் தியை உன் மர்மக்குள மகேஸ்வர னுக்குத் தெரிவி!'' என்றான்.

அப்போது சித்தசாதகன் ''பேஷ். சரியான திட்டம். இவனது கைகால் களைக் கட்டி குகைக்குள் போடலாம். இந்த மனிதக் குரங்கு அடிபட்டு மூர்ச்சையாகிக் கிடக்கிறது. ஏய் சர்ப்பநகா! போய்க் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா!'' என்று கட்டளை இட்டான். அவனோ மகர





கேதுவைப் பார்த்துத் தயங்கி நிற்கவே சித்தசாதகன் ''அவனை ஏன் பார்க்கிறாய்? அவன் இனி உன் எஜமானன் அல்ல. இப்போது நான் சொல்கிறபடி தான் நடக்க வேண்டும். உம். போ!'' என்று கூறி விரட்டினான். சர்ப்ப நகனும் தண்ணீர் கொண்டுவரச் சென்றான்.

அப்போது சித்தசாதகன் மகரகேதுவையும் அவனுடன் இருந்த மூன்று பேர்களையும் பார்த்தான். ஒருவனை அவன் சுட்டிக்காட்டி, ''அடடே! இவன் மரக்கால் மனிதனா?'' என்று கேட்டான். மகரகேதுவும், ''இவன் எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவன் அல்ல. உங்களைப் போல உயர் குடி மகன் இவன். உங்களைப் போலவே மன்னர் கனகாட்சரரின் மகனையும் மகளையும் தேடிக் கொண்டு காட்டுப் பகுதிக்கு வந்தவன். அங்கு ஒரு சிறுத்தைப் புலியிடம் சிக்கித் தன் ஒருகாலை இழந்துவிட்டான். இவன் பெயர் மங்களவர்மன்,'' என்றான்.

ஜெயசீலனும் ''ஓஹோ! இரணிய புரத்து சேனாதிபதியின் மகன் மங்கள வர்மனா? இவனைப் பார்த்ததுமே இன்னானென தெரிந்து கொண்டு விட்டேன். என்ன தான் மருத்துவ மணி என்று பெயர் மாறிவிட்டாலும் உண்மை மறைந்துவிடுமா? இவன் எனக்குப் போட்டியாக மன்னனின் மகளையும் மகனையும் தேடிக் கண்டு பிடித்து அரண்மனைக்குக் கொண்டு வந்துவிடுவதாகச் சவால் விட்டவன் தானே! ஆனால் இப்போது இவன் தன் ஒரு காலை இழந்ததோடு தன் சொந்தப் பெயரைக் கூட இழந்து விட்டானா?'' என்று ஏளனமாகக் கேட்டான்.

இதற்குள் சர்ப்பநகன் ஒரு துணியைத் தண்ணீரில் நனைத்து எடுத்து வந்தான். அதனை அவன் சித்த சாதகனிடம் கொடுக்கவே சாதகன் அதனைக் கையில் வாங்கிக் கொண்டு மனிதக் குரங்கின் தலை மீது அந்தத் துணியிலிருந்த தண்ணீரைப் பிழிந் தான். பிறகு ஒரு தட்டு தட்டி ''ஏய் குரங்கே! எழுந்திரு. இனி உன் உயிருக்கு எந்த விதமான ஆபத்தும் இல்லை,'' என்றான்.

மனிதக் குரங்கும் கண்களைத் திறந்து சுற்றிலும் பார்த்தது. சற்று தூரத்தில் விசித்திர யானை இருப்பதைக் கண்டு பயங்கரமாகக் கத்திக் கொண்டு எழுந்து நின்று அதன் மீது பாயப் போனது. சித்தசாதகன் அத

னைப் பிடித்து நிறுத்தி ''ஏய் குரங்கே! ஆத்திரப்படாதே. நான்தான் உன்னை உயிர்ப்பித்தவன். இதை நன்றாக நினைவில் வைத்துக் கொள். இந்த நிமிடம் முதல் நீ என் அடிமை. உன்னை எனது வாகனமாகப் பயன் படுத்தப் போகிறேன். தெரிந்ததா?'' என்று கூறித் தன் திரிசூலத்தை எடுத்து உயரத் தூக்கி ஆட்டினான். ஆனால் மனிதக் குரங்கோ சித்தசாதகன் மீது பாய முயன்றது.

சித்தசாதகன் தன் திரிசூலத்தால் அதன் தலையில் ஓங்கி ஓர் அடி கொடுத்தான். மனிதக் குரங்கு அந்த அடியால் நிலைகுலைந்து நின்றது. சித்தசாதகனின் வலிமையைக் கண்டு பயந்து போயிற்று. உடனே அது கால்களில் விழுந்து கைகூப்பியது. அதைக் கண்ட சித்தசாதகன் மகிழ்ந்து போய் தன் திரிசூலத்தைத் தாழ்த்திய வாறே ''பயப்படாதே. எழுந்திரு. நான் உன்னை ஒன்றும் செய்ய மாட் டேன். இனிமேல் நீ நான் சொல்கிற படி தான் நடக்க வேண்டும். தெரிந் ததா?'' என அதிகாரக் குரலில் கூறி னான். அதுவும் 'சரி' என்பது போலத் தலையை ஆட்டியது.

அப்போது ஜெயசீலன், ''சாதகா! நீ விரும்பியபடி மனிதக் குரங்கை உன் வாகனமாக ஆக்கிக் கொண்டு விட்டாய். இனி என் விருப்பப்படி நடக்குமா? மர்மக் குளத்தை அடைய வேண்டும். மன்னனின் மகனையும் மகளையும் கண்டுபிடித்து அவர்களை மன்னனிடம் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். மகரகேது என் னவோ மர்மக் குளத்தை அடைய வழி காட்டுவதாகக் கூறி இருக்கிறான். அங்கே நாம் போனபின் என்ன நடக்கும் என்பது இப்போது நமக்கே தெரியாது. ஆனால் எதையும் சந்திக்க நான் தயார்,'' என்றான்.

சித்தசாதகனும், ''ஜெயசீலா, கவ லைப்படாதே! என் விருப்பம் நிறை வேறியது போல உன் விருப்பமும் நிறைவேறத்தான் போகிறது. அரச குமாரனையும் அரசகுமாரியையும் மீட்கத்தான் போகிறோம். இப் போதைக்கு மகரகேதுவை நம்பு வோமே!'' என்றான். *(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# உயர்ந்த உபசரிப்பு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல் கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கரப் பாதி ராத்திரி வேளையில் நீ இப்படிச் சிரமப்படுவதைப் பார்த்தால் நீ மேற்கொண்ட வேலை உனக்குப் புரிந்தும் புரியாததும் போலத் தெரி கிறது. உன் போன்ற நிலையில்



இருந்து தெளிவு பெற்ற காசிநாதன் என்ற மாபெரும் பண்டிதரைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வித்தியாதரரின் குருகுலத்தில் லோகநாதன், ரகுநாதன், காசிநாதன் என்ற மூவர் கல்வி பயின்று வந்தார்கள். இவர்களில் காசிநாதன் படிப்பில் முதலாவதாக முன்னேறிக் கொண்டிருந்தான். தன் குரு ஒருமுறை சொல்வதைக் கவனமாகக் கேட்டு புரிந்து கொள்பவன். லோகநாதன் பரம்பரைப் பணக்காரரின் மகன். ரகுநாதன் ஒரு வியாபாரியின் மகன். காசிநாதன் சாதாரண குடும்பத்தில் பிறந்தவன். லோகநாதனுக்கும் ரகுநாதனுக்கும் குரு சொல்வது உடனே புரியாததால் அதுபற்றிப் பிறகு காசிநாதனிடம்கேட்பார்கள். அவனும் விளக்கமாகக் கூறி அவர்களுக்குப் பாடங்களை விளங்க வைத்து வந்தான்.

மூவரின் படிப்பு முடிந்ததும் வித்தியாதரர் மூவரையும் அருகே அழைத்தார். முதலில் காசிநாதனிடம் ''நீ இலக்கியத்தில் நல்ல தேர்ச்சி பெற்றாய். அதனால் நீ மன்னனின் தர்பாருக்குப் போய் ஆஸ்தான வித்வானாக வேலையை அடை!'' என்றார். பிறகு லோகநாதனிடமும் ரகுநாதனிடமும் ''நீங்கள் இருவரும் குணபுரத்திலிருந்து வந்தவர்கள். லோகநாதன் பரம்பரைப் பணக்காரன். அவன் தான தர்மங்களைத் தாராளமாகச் செய்து பேரும் புகழுமாய் வாழட்டும். ரகுநாதன் தன் தந்தையின் வியாபாரத்தை நடத்தி வரட்டும்!'' எனக் கூறி ஆசிகள் அளித்து அனுப்பி வைத்தார்.

காசிநாதன் தலைநகருக்குப் போய் மன்னனைக் கண்டு ஆஸ்தான வித்வானாகிவிட்டான். லோகநாதனும் ரகுநாதனும் குணபுரத்திற்குச் சென்றார்கள். லோகநாதன் தன் குரு சொன்னபடியே தன் வீட்டிற்கு யார் வந்தாலும் உபசரித்து, உணவு அளித்து அனுப்பி வந்தான். அது மட்டுமா! அதிகாரிகள், பிரமுகர்கள், பணக்காரர்கள் என்று யாராவது அந்த ஊருக்கு வருவதை அவன் தெரிந்து கொண்டு தன் வில்வண்டியை ஊர் எல்லைக்கு அனுப்பி அவரைத் தன் வீட்டிற்கு அழைத்துவரச் செய்து மரியாதைகள் செய்வதோடு அவர்கள் தங்க எல்லா

வசதிகளையும் செய்து கொடுப்பான். அறுசுவை உணவும் அளிப்பான். அதனால் அவன் அந்த ஊரின் பிர முகனாகிவிட்டான். 'கலியுகக் கர் ணன்' என்று அவனை எல்லோரும் புகழலானார்கள்.

ரகுநாதன் லோகநாதனுக்கு நேர் மாறான இயல்பு கொண்டவன். பேச்சை அளந்தே பேசுவான். யாரை யும் தன் வீட்டிற்கு வா என்று கூப் பிடவும் மாட்டான். வியாபாரத்தில் முழு கவனம் செலுத்தி வந்தான். அதனால் அவனைக் காண வரும் அவனது உறவினர்கள் இரண்டொரு நிமிடங்கள் பேசிவிட்டுப் போய் விடுவார்கள். அவன் யாரையும் தன் வீட்டில் தங்கச் சொல்வதும் இல்லை. சாப்பிட்டுப் போகும்படிக் கூறுவதும் இல்லை.

இப்படி இருக்கையில் அந்த ஊரின் அதிகாரியின் அழைப்பின் பேரில் காசிநாதன் அந்த ஊருக்கு அவன் வீட்டிற்கு வந்தான். அந்த அதிகாரியும் காசிநாதனிடம், "நீங்கள் நான்கைந்து நாட்களுக்கு என் வீட் டிலேயே தங்குங்கள். வேறு எங்கும் போக வேண்டாம்," என்றான். காசி நாதனோ, "இந்த ஊரில் என்னுடன் படித்த நண்பன் லோகநாதன் இருக் கிறான். அவனுக்கு நான் வந்திருப் பதைத் தெரிவித்தால் அவன் வந்து என்னை அழைத்துக் கொண்டு போவான்," என்றான். அதிகாரியும் தன் பணியாள் ஒருவன் வாயிலாக லோகநாதனுக்குத் தகவல் அனுப் பினான். லோகநாதனோ காசிநாத




னைத் தன் வீட்டிற்கு அனுப்பி வைக்கும்படி அந்தப் பணியாளிடம் சொல்லி அனுப்பினான்.

காசிநாதன் லோகநாதனின் வீட்டை அடைந்தான். லோகநாத னும் "வா, வா! நீ நேராக என் வீட்டிற்கே வந்திருக்கலாமே! அதி காரிகள், பிரமுகர்கள், பணக்காரர்கள் போன்றவர்கள் இந்த ஊருக்கு வரு வதை நான் முன்கூட்டியே தெரிந்து கொண்டு அவர்களை அழைத்து வர ஊர் எல்லைக்கு என் வில்வண்டியை அனுப்புவேன். நீ வருவது தெரியும். நீயே நேராக என் வீட்டிற்கு வருவாய் என்றே எதிர்பார்த்தேன். பரவா யில்லை, எப்படியோ நீ என் வீட் டிற்கு வந்தாகிவிட்டது. உனக்கு இருக்க அறை, படுக்க மெத்தை,



நல்ல விருந்து சாப்பாடு, கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று ஓடிவரும் வேலையாள் என்று எல்லா ஏற்பாடு களையும் செய்கிறேன்,'' என்றான்.

அவனது இந்த ஆர்ப்பாட்டச் சொற்களைக் கேட்டு காசிநாதன் மனதிற்குள் சிரித்தவாறே, ''ஆமாம். நம் நண்பன் ரகுநாதன் எப்படி இருக்கிறான்?'' என்று கேட்டான். லோகநாதனும் ''அவனா? வியா பாரம் என்று அலைந்து திரிகிறான். இப்போது ஊரில் இல்லை. இரண்டு நாட்களில் திரும்பி வருவானாம். அவன் வீட்டிற்கு நீ போனால் இந்த மாதிரியான வசதிகள் கிடைக்காது. எனவே இங்கேயே இரு. என் ஆட்களிடம் சொல்லி உன்னை கவனமாகப் பார்த்துக் கொள்ளச் சொல்கிறேன்,'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

காசிநாதன் திகைத்துப் போனான். வசதிகள், ஆட்கள், உணவு எல்லாம் கிடைத்தும் லோகநாதனுடன் உட் கார்ந்து பேச முடியவில்லையே, இரண்டு நாட்கள் கழிந்ததும் ரகு நாதனைப் போய்ப் பார்த்துப் பேசி அவன் இயல்பு எப்படி உள்ளது எனக் காண நினைத்தான். ஆனால் மறுநாள் காலையிலேயே ரகுநாதன் லோக நாதன் வீட்டிற்கு ஓடோடி வந்து காசிநாதனைக் கண்டு ''நீ என் ஊருக்கு வந்திருக்கிறாய் என்று கேள்விப் பட்டதும் வெளியூரில் இருந்த நான் என் வேலையைப் பாதியிலேயே விட்டுவிட்டு ஓடோடி வந்தேன். வா, இப்போதே என் வீட்டிற்குப் போக லாம்,'' என்று கூறி அவன் கையைப் பிடித்து இழுத்தான். காசிநாதனும் உடனே அவனுடன் கிளம்பினான். அப்போது லோகநாதன் ''அங்கே இதுபோன்ற வசதிகள் இராது. அதனால் நீ உடனேயே வந்துவிடு!'' என்று கூறி இருவரையும் அனுப்பி வைத்தான்.

காசிநாதன் ரகுநாதனின் வீட் டிற்குச் சென்றான். லோகநாதனின் வீட்டிலிருந்த வசதிகள் அங்கு இருக்கவில்லை. ஆனால் ரகுநாதன் பரிவுடன் தன் நண்பனைக் கவனித்துக் கொண்டான். வீட்டில் எல்லோரும் சாப்பிடும் எளிய உணவே அவனுக் கும் அளிக்கப்பட்டது. அவனுடன் ரகுநாதனின் குடும்பத்தவர் சிரித்துப் பேசினார்கள். காசிநாதனின் மனம்

மகிழ்ந்தது. அன்று மாலை லோக நாதனின் வேலையாள் அங்கு வந்து காசிநாதனிடம் ''ஐயா உங்களை அழைத்துவரச் சொன்னார்கள். இங்கே உங்களுக்கு அங்கே உள்ளது போல வசதிகள் இல்லாததால் நீங்கள் உடனே அங்கு வந்துவிட வேண்டும் என்று தெரிவிக்கச் சொன்னார். இப்போதே கிளம்பி வருகிறீர்களா?'' என்று கேட்டான்.

காசிநாதனோ ''நான் அங்கே வரவில்லை. இந்த வீட்டிலேயே நான்கைந்து நாட்கள் இருந்துவிட்டுத் தலைநகருக்குப் போகப் போகிறேன்,'' என்று கூறி அனுப்பினான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! காசிநாதன் நன்கு படித்தவன். குருகுலத்தில் மாணவர்களில் முதன்மையாக இருந்தவன். அவனது நண்பர்களான லோகநாதனும் ரகுநாதனும் தமக்குத் தோன்றிய சந்தேகங்களுக்கு எல்லாம் அவனிடம் விளக்கம் கேட்டுத் தெரிந்து கொண்டவர்கள். இப்படி அவர்கள் மூவரும் நெருங்கிப் பழகியவர்கள். காசிநாதன் சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவன். லோகநாதனோ பரம்பரைப் பரம்பரையாக வந்த பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன். ரகுநாதன் பெரும் பணக்காரக் குடும்பத்தில் பிறக்காது போனாலும் வியாபாரத்தால் போதிய வசதிகளைப் பெற்ற குடும்பத்தில் வந்தவன். எனவே இம்மூவரும் குருகுலத்தில் நண்பர்களாகச் சமநிலையில் பழகிய போதிலும் படிப்பை முடித்துக் கொண்டு அங்கிருந்து வெளியே வந்தபின் அவர்களது போக்கில் மாற்றம் ஏற்படத்தானே செய்யும்? எனவே லோகநாதன் தன் அந்தஸ்திற்கு ஏற்ப, படாடோபத்துடன் நடந்து வந்தான். அவனது நண்பன்



லோகநாதன் எல்லா வசதிகளைச் செய்து கொடுத்த போதிலும் அவற்றை விரும்பாமல் அதுமாதிரி வசதிகள் இல்லாத ரகுநாதனின் வீட்டில் சில நாட்கள் தங்கிவிட்டுத் தலைநகருக்குச் செல்லத் தீர்மானித் தானே இது சரியான செயலா? லோகநாதனை மதிக்காதது போல ஆகிவிடாதா? இக் கேள்வி களுக்குச் சரியான விடைகள் தெரிந் திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''லோகநாதனின் உபசரிப்பில் பரிவு இல்லை. படா டோபமே இருந்தது. தனது பள்ளித் தோழன் தன் ஊருக்கு வருவது அவ னுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் அவனைக் கண்டு தன் வீட்டிற்கு அழைத்துச் செல்ல முயலவில்லை. அவன் சாதாரண நிலையில் உள் ளவன்தானே என அலட்சியமாக இருந்தான். பெரிய மனிதர்களுக்கு வண்டி அனுப்பி அழைத்துப் போவ தாகக் கூறியதால் அவன் காசி நாதனைத் தாழ்வாக மதித்தான் என்று ஆகிறது. அது மட்டும் அல்ல. காசி நாதன் நேராகத் தன் வீட்டிற்கு வந்திருக்க வேண்டும் என்றும் லோக நாதன் எதிர்பார்த்தான். ஆசிரமத்தில் மூவரும் நெருங்கிய நண்பர்கள் என்றாலும் தற்போது மற்ற நண் பனான ரகுநாதனைப் பற்றிக் கேட்ட போது லோகநாதன் அலட்சியமாக பதில் கூறினான். வசதிகள் இல்லாது போனாலும் எளிய உணவானாலும் பரிவுடன் ரகுநாதன் உபசரித்து அளித் தான். அது மட்டும் அல்ல அவன் தன் வேலையைப் பாதியில் விட்டு விட்டு ஓடோடி வந்து காசிநாதனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். இந்த உயரிய பண்பு லோகநாதனிடம் இருக்கவில்லை. அதனால் தான் காசி நாதன் லோகநாதனின் வீட்டிற்குப் போகாமல் ரகுநாதனின் வீட்டில் தங்கிவிட்டான். அவன் செய்ததில் தவறு எதுவும் இல்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






## சீப்பு பயன்படும் விதம்!



சீப்பு தலைமுடியையும் கூந்தலையும் வாரப் பயன்படுவதோடு இருப்ப தில்லை. ஒரிஸ்ஸாவில் ஜுவாங் என்ற மலைச் சாதிப் பிரிவினர் இதைத் தம் காதல் பரிசாக அளிக்கிறார்கள். திரு மணங்களிலும் சீப்பு முக்கிய இடம் பெறுகிறது. இவர்கள் நடத்தும் விழாக் களில் ஜுவாங் இளைஞர்கள் தாம் ஜோடி சேர்ந்து ஆடும் இளம்பெண்களுக் குச் சீப்பைக் கொடுக்கிறார்கள். மிக நெருக்கமாகப் பழகும் ஜோடியில் பெண் ஆணிடமிருந்து சீப்பை திருடி எடுத்துக் கொள்வாளாம். இது அவள் தன் காதலை அவனுக்குத் தெரிவிக்கும் முறையாம். திருமணத்தின்போது மணமகன் மனமக ளுக்குச் சீப்பைக் கொடுப்பது வழக்க மாம். மணப்பெண் அந்த சீப்பால் மண மகனின் தலையை வாரிவிடுவாளாம்!

## வண்ணச் சக்கரவர்த்தி!

நீங்கள் எந்த வண்ணத்தைத் தேர்ந்து எடுப்பீர்கள்? இந்த விளையாட்டை விளையாடும்போது அக்பர் சக்கர வர்த்தியின் வண்ணங்களையும் சேர்த்து வைத்துக் கொண்டு விளையாடுங்கள். அவரது ஆயினே-ஏ அக்பரி என்ற வரலாற்றுத் தொகுப்பில் அவரது ஆடைகள் வைக்கப்படும் அறை பற்றிய வர்ணனை உள்ளது. அதில் சிவப்பு, கெம்பு, தங்கம், ஆரஞ்சு, பித்தனை, புல், பருத்தி, சந்தன மரம், பாதாம், திராட்சை, தேன், ஆப்பிள், வைக்கோல், நீலம், மாம்பழம் ஆகிய வண்ணங்கள் பற்றிக் குறிப்பிடப்பட் டுள்ளது. மேலும் அவர் பழுப்பு, ஊதா, வெளிர் நீலம், வயலெட், நல்ல சிவப்பு போன்ற வண்ணங்களுடையனவற்றை யும் பயன்படுத்தினாராம்.



இந்தியப் புராதனக் கதைகள் - 10

# அழிவைத் தேடிக்கொண்ட அரக்கன்



தட்சனின் புதல்விகளில் ஒருத்தி திதி. அவளுடைய கண்வர் கசியப முனிவர். அவள் பல குழந்தைகளைப் பெற்றாள். அவர்களை தைத்யர்கள் அதாவது அரக்கர்கள் என்று கூறினார்கள். அரக்கர்கள் எப்போதும் தேவர்களுடன் போர்கள் புரிந்து கொண்டே இருந்தார்கள். இவற்றில் அரக்கர்கள் அழியலானார்கள்.

இதைக் கண்டு திதி காட்டிற்குள் அமைதி நிலவிய இடத்தில் அமர்ந்து கடும் தவம் செய்தாள். அவள் தனக்கு வலிமை மிக்க மகனை அளிக்க வேண்டும் என்றும் அவனை தேவர்கள் வெல்ல முடியாமல் இருக்க வேண்டும் என்ற வரத்தை பகவானிடம் வேண்டிப் பெற்றாள். அதன் பயனாக அவளுக்கு ஆயிரம் கால்களும் ஆயிரம் கைளும் ஆயிரம் கண்களும் கொண்ட விசித்திரமான குழந்தை பிறந்தது. அவன் வளர்ந்து பெரியவனானதும் பலம் மிக்க அரக்கனானான்.

அந்த வலிமையை அவன் நற்செயல்களுக்குப் பயன்படுத்தாமல் பிறரைத் துன்புறுத்தவே பயன்படுத்தினான். அவன் கர்வம் கொண்டு தலைகால் தெரியாமல் துள்ளி யாருடைய அறிவுரையையும் ஏற்காமல் இருந்தான். அவன் யாரையும் மதிக்கவும் இல்லை. ரிஷிகளையும் முனிவர்களையும் துன்புறுத்தி அவர்களது தவங்களுக்கும், ஹோமங்களுக்கும் யாகங்களுக்கும் இடைஞ்சல் செய்து வந்தான். கண்மூடித்தனமாக அவன் நடந்து கொண்டதால்

- பாரதீயன் -

குருடன் என்ற பொருளில் அவனை எல்லோரும் அந்தகன் என்று குறிப்பிட்டனர்.

தேவர்கள் தான் அரக்கர்களை அழித்து வருகிறார்கள் என்பதைக் கண்டு அவன் கடும் கோபம் கொண்டான். எனவே அவன் தேவர்களை பழிக்குப் பழி வாங்கலானான். அந்தகனுக்கும் தேவர்களுக்கும் இடையே கடுமையான போர்கள் நடந்தன. ஒவ்வொருமுறையிலும் தேவர்களே தோற்றுக் கொண்டு வந்தார்கள். தேவர்களால் அவனைக் கொல்லவே முடியவில்லை. ஏனென்றால் அவனது தாயார் பகவானிடம் அப்படிப்பட்ட வரத்தைக் கேட்டுப் பெற்றிருந்தாளே! தேவர்களுக்கோ அவனை எப்படி ஒழிப்பது என்று தெரியவில்லை. அவனை தேவர்களால் அழிக்க முடியாதுதான். ஆனால் மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியவர்களில் ஒருவர் அவனைக் கொல்ல முடியுமே.

ஒரு நாள் நாரத முனிவர் அரக்கன் அந்தகனைக் கண்டார். அவர் ஒரு மாலையை அணிந்திருந்தார். அந்த மாலை மிக அழகாயும் நறுமணம் கொண்டதாயும் இருந்தது. அதையே கண் கொட்டமல் பார்த்த அந்தகன் அவரிடம், ''முனிவரே! இந்த மாலையில் உள்ள மலர்கள் நல்ல வாசனை கொண்டு இருக்கின்றனவே! இவற்றை நீங்கள் எங்கே கண்டு பறித்து மாலையாகக் கட்டினீர்கள்?'' என்று கேட்டான்.

நாரதரும் சிரித்துக் கொண்டே



''மூவுலகில் எங்கே தேடினாலும் இது ஒரே ஒரு இடத்தில்தான் கிடைக்கும். அது மந்தரமலை. இந்த மலரையும் மந்தரமலர் என்றுதான் கூறுவார்கள்,'' என்றார்.

அந்தகனும் ''நானும் இந்த மாதிரி ஒரு மாலையை அணிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்'' என்றான். நாரதரும் ''நான் இந்த மாலையைக்கூட உனக்குக் கொடுக்க நினைத்தேன். ஆனால் இது கொஞ்சம் வாடிப் போய்விட்டது. மேலும் நான் போட்டுக் கொண்ட மாலையை உனக்குக் கொடுத்து அணியச் சொல்வது சரியல்லவே'' என்றார்.

அந்தகனோ ''பரவாயில்லை. நானே அங்கே போய் மந்தர மலர்களைப் பறித்து மாலைகட்டி அணிந்து கொள்ளப் போகிறேன்'' என்றான். நாரதரும் அவனுக்கு மந்தர

மலைக்கு போகும் வழியைச் சொன் னார். அந்த மலைக்கு அவன் சென் றான். அந்த மலையின் உச்சியில் ஏராளமான மந்தர மலர்கள் இருப் பதை அவன் பார்த்தான். தானே அந்த இடத்தின் அதிபதி என்று எண்ணி அவன் கர்வப்பட்டுக் கொண்டிருந்த போது இருவர் அங்கு வந்தார்கள். அவர்கள் கணவனும் மனைவியும் என்பது தெரிந்தது.

அவர்கள் மந்தரமலர்கள் இருந்த பகுதியைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பதை அந்தகன் பார்த் தான். அவனுக்கு ஆத்திரம் ஆத்திர மாக வந்தது. தன் உடமை எனக் கருதி அப்பகுதியில் வேறு யாரோ நுழை வதா என அவன் கோபம் கொண் டான். அவர்களைப் பார்த்து, ''போங் கள் இங்கிருந்து. யார் நீங்கள்? இந்த இடம் மட்டும் அல்ல, மூவுலகமும் எனக்குச் சொந்தம். என் அனுமதி இன்றி யாரும் இங்கே அடி எடுத்து வைக்கக் கூடாது. தெரிந்ததா?'' என்று கடுமையாகக் கூறினான்.

அந்த தம்பதிகளோ ஏளனமாகச் சிரித்து, ''நாங்கள் இங்கே தான் இருப்போம். உன்னால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்!'' என் றார்கள். அந்தகனோ ''நான் யார் தெரியுமா? அந்தகன். மூவுலகிலும் என் பெயரைக் கேட்டாலே எல் லோரும் நடுநடுங்கிப் போவார்கள். மரியாதையாக நீங்கள் இங்கே இருந்து இப்போதே போய்விடுங் கள். இல்லாவிட்டால் உங்களை அடித்து நொறுக்கிவிடுவேன்'' என்று உறுமினான்.

அந்த தம்பதிகள் பரமசிவனும் பார்வதியும்தான். அவர்கள் அந்தகன் கூறியதை லட்சியம் செய்யவில்லை. அதனால் அந்தகன் மிகுந்த கோபத் துடன் பற்களை 'நறநற'வென்று கடித்தவாறே அவர்களை பிடிக்கத் தன் கைகளை அகல விரித்தான். அப்போது அவனுக்குத் தான் எதிர்க்கப் போவது மும்மூர்த்திகளில் ஒருவரான பரமசிவன் என்பது தெரியவில்லை. ஆனால் பரமசிவன் தன் திரிசூலத்தால் அவனை அடித்து வீழ்த்தினார். அவன் அந்த மலை யிலிருந்து உருளவே, அவனது உயிர் உடலிருந்து பிரிந்தது.





# பாட்டியும் பேரனும்

வெகுகாலத்திற்கு முன் ஒரு கிழவி தன் பேரன் சுந்தரத்துடன் இருந்தாள். அவள் கள்ளம், கபடு தெரியாத அப்பாவி. அதனால் அவளைப் பலரும் ஏமாற்றித் தமக்கு வேண்டியதை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டு போய்விடுவார்கள். அவளது பேரன் அவளை இதற்காக எப்போதும் திட்டிக் கொண்டே இருந்தான். தான் சம்பாதித்து வாங்கிப் போடுவதை எல்லாம் அவள் பிறருக்கு எடுத்துக் கொடுத்து விடுவது தவறு எனக் கடுமையாகக் கண்டித்து வந்தான்.

பரம ஏழையான சுந்தரம் தான் எப்படியாவது முன்னுக்கு வர நினைத்து சிறுகச் சிறுக பணம் சேர்க்கலானான். அவன் அடுத்துள்ள நகரில் ஒரு பெட்டிக் கடை வைக்கலாம் என எண்ணி தான் சேர்த்த இரு நூறு ரூபாயை ஒரு பையில் போட்டுத் தன் பெட்டிக்குள் வைத்திருந்தான். ஒரு நாள் அவன் ஏதோ வேலையாக நகரத்திற்குப் போயிருந்த சமயம் கிழவி அவனது பெட்டியைத் திறந்து பார்த்தாள். அதில் ஒரு பையில் இரு நூறு ரூபாய் இருப்பது கண்டு அதை எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வெளியே வந்தாள்.

அவள் வருவோர் போவோரிடம் ''பார்த்தீர்களா என் பேரனின் சாமர்த்தியத்தை! அவன் இரு நூறு ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறான் தெரியுமா?'' என்று சொல்லிப் பணப் பையைக் காட்டிக் கொண்டிருந்தாள். சற்று நேரம் கழிந்தது.

அப்போது இருவர் ஓடோடிவந்து கிழவியிடம் ''பாட்டீ! நாங்களும் உன் பேரன் சுந்தரமும் மாமரத்தில் ஏறி மாங்காய் பறித்துக் கொண்டிருந்தோம். அப்போது உன் பேரன் மரத்திலிருந்து கீழே விழுந்து விட்டான். நல்ல அடி. காயம் பலமாகப் பட்டிருக்கிறது. அவனை வண்டியில் வைத்து நகரமருத்துவமனைக்கு

– லக்ஷ்மி சங்கர்–



அனுப்பிவிட்டோம். வைத்தியச் செலவுக்குத் தன் பணத்தை எடுத்து வரும்ளபடி அவன் எங்களிடம் கூறி அனுப்பி இருக்கிறான். பெட்டியில் இருநூறு ரூபாய் வைத்திருக்கிறா னாம். அதை எடுத்துக் கொடு'' என்றார்கள்.

கிழவியும் ''ஐயோ! சுந்தரத்திற்குப் படுகாயமா! நல்ல விதமாக வைத் தியம் செய்து அழைத்து வாருங் களப்பா!'' என்று சொல்லிப் பணப் பையை அவர்களிடம் கொடுத்தாள். அவர்களும் அதை வாங்கிக் கொண்டு போய் விட்டார்கள். மாலையில் வீட்டிற்கு வந்த சுந்தரம் தன் பாட்டி தான் சேர்த்து வைத்திருந்த பணத்தை யாரோ இருவரிடம் கொடுத்து விட்டதை அறிந்து ''யாரோ உன்னை நன்றாக ஏமாற்றி, நான் வியாபாரம் செய்வதற்காக வைத்திருந்த பணத் தைத் தட்டிக் கொண்டு போய்விட் டார்களே. இப்படியே நீ செய்து கொண்டே இருந்தால் நான் உருப் படவே மாட்டேன். காட்டிற்குப் போய் எந்தக் கொடிய மிருகத் திற்காகவாவது இரையாகிறேன்'' என்று கூறி வீட்டை விட்டு வெளியேறினான்.

கிழவி திகைத்துப்போனாள். நடந் ததைப் புரிந்து கொள்ள அவளுக்குச் சற்று நேரமாகியது. அவளும் இருட் டில் தன் பேரன் போன வழியிலே தட்டுத் தடுமாறிக் கொண்டே அவனை அழைத்துவரும் எண்ணத் தோடு சென்றாள். காட்டில் போய்க் கொண்டிருந்த இரு பிசாசுகள் அவளைக் கண்டு ஏன் இப்படிப் புலம்புகிறாய் எனக் கேட்டன. அவளும் நடந்ததைக் கூறினாள். அந்தப் பிசாசுகளும், ''கிழவி கவ லைப்படாதே! பணத்தையும் உன் பேரனையும் கண்டுபிடித்து உன் னிடம் ஒப்படைக்கிறோம்'' என்று ஆறுதல் கூறின.

காட்டிற்குப் புதிதாக வந்த இரு திருடர்களே கிழவியை ஏமாற் றியவர்கள் என்பதை அப்பிசாசுகள் ஊகித்துவிட்டன. அவர்கள் மறைந் துள்ள வீடு அவற்றிற்குத் தெரியும் அவை கிழவியை அழைத்துக் கொண்டு அங்கே சென்றன. கிழவி யிடம் ''நீ இங்கேயே இரு'' நாங்கள் உள்ளே போய்விட்டு வருகிறோம்,'' என்று கூறிவிட்டு மறைந்து போயின.

அந்த வீட்டினுள் இரு திருடர்கள் ஓர் அழகிய பெண்ணைக் கடத்திக்

கொண்டு வந்து வைத்திருந்தார்கள். அவர்கள் அவளிடம் ''நீ எங்களில் ஒருவனை மணந்து கொள்ள வேண்டும்,'' என வற்புறுத்தினார்கள். அவளோ ''என் நகைகளை எடுத்துக் கொண்டு என்னை விட்டுவிடுங்கள்,'' என்று கெஞ்சினாள். அவர்களோ, ''அதெல்லாம் முடியாது. எங்களுக்கு நீயும் வேண்டும், நகைகளும் வேண்டும்,'' என்று சற்றும் இரக்கம் காட்டாமல் கூறினார்கள்.

அது வரை கெஞ்சிக் கொண்டிருந்த அந்தப் பெண் திடீரென ஆவேசம் வந்தது போல மூலையில் கிடந்த ஒரு தடியை எடுத்துக் கொண்டு அவர்களை அடித்தவாறே ''தடியன்களா! என்னடா வேண்டும்? நானா வேண்டும்? இந்தா வாங்கிக் கொள்,'' என்று நான்கு சாத்து சாத்தினாள். அவர்கள் அடிகளை தாங்க முடியாமல் அலறிக் கொண்டு வீட்டினுள்ளிருந்து வெளியே ஓடி வந்தார்கள். அப்போது வாசலில் நின்று கொண்டிருந்த ஒரு பிசாசு அவர்களைப் பிடித்து இழுத்துக் கொண்டுபோய் அழகிய பெண்முன் கொண்டுபோய் நிறுத்தியது. அந்தப் பெண்ணை அதற்குமுன் மற்ற பிசாசு பிடித்துக் கொண்டு தான் அத்திருடன்களை அடித்து நொறுக்கியது!

இரு பிசாசுகளும் அத்திருடர்களை உதைத்து ''திருட்டுப் பயல்களா! கிழவியை ஏமாற்றிப் பணத்தைத் திருடியவர்கள் நீங்கள்தானே. இந்தப் பெண்ணை வேறு கடத்தியா வந்தீர்கள்?'' என அதட்டிக் கேட்டன.



அவர்களும் 'ஆம்' என ஒப்புக் கொள்ளவே, அவை ''மரியாதையாக அந்தப் பணத்தை இந்தக் கிழவியிடம் கொடுத்து விட்டு ஓடுங்கள்,'' என்றன. அவர்களும் கிழவியிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு தப்பினோம், பிழைத்தோம் என்று ஓடிவிட்டார்கள்.

அப்போது அந்தப் பெண் ''நான் என் சித்தியின் கொடுமை தாங்க முடியாமல் என் நகைகளோடு வீட்டைவிட்டு ஓடிவந்தேன். அப்போதுதான் இத்திருடர்கள் என்னைப் பிடித்துக் கொண்டு இங்கே வந்துவிட்டார்கள்,'' என்றாள். இந்த சமயம் காட்டில் திரிந்த சுந்தரம் அங்கு வந்தான். அவன் கிழவியைக் கண்டு ''பாட்டீ! நீயா? எப்படி இங்கே வந்தாய்?'' என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டான்.

பிசாசுகளும், ''கிழவி உன்னைத் தேடிக் கொண்டு வந்தாள். நாங்கள் இவளை இந்தக் காட்டில் கண்டோம். இவள் மிகவும் கவலையுடன் இருப் பதைக் கண்டு அதற்குக் காரணம் என்ன என்று கேட்டோம்.

இவளும், 'என்ன என்று சொல் வேன்? என் பேரன் சிறு வியாபாரம் செய்வதற்காக இருநூறு ரூபாய் சேர்த்து வைத்திருந்தான். அவன் அதை என்னிடம் சொல்லவில்லை. ஒருநாள் அவன் வீட்டில் இல்லாத போது அவனது பெட்டியைத் திறந்து பார்த்தேன். அதில் இருநூறு ரூபாய் இருக்கவே, அதை எடுத்து ஊரா ருக்குக் காட்டி 'பார்த்தீர்களா என் பேரனின் சாமர்த்தியத்தை!' என்று கூறினேன். இதைக் கேட்ட இரு போக்கிரிகள் என் வீட்டிற்கு வந்து 'பாட்டீ! உன் பேரன் மரத்திலிருந்து விழுந்து படுகாயப்பட்டுவிட்டான். அவனை மருத்துவமனையில் சேர்த்துவிட்டோம். மருத்துவச் செல விற்கு தான் வைத்திருக்கும் இருநூறு ரூபாயை வாங்கிவரச் சொன்னான். அதை எடுத்துக் கொடு!' என்று கூறி என்னை ஏமாற்றி அந்தப் பணத்தைத் தட்டிக் கொண்டு போய்விட்டார்கள்,' என்றாள்.

உடனே எங்களுக்கு இந்தக் காட் டிலுள்ள இரு திருடர்களின் மேல் சந்தேகம் வந்தது. கிழவியை இங்கே அழைத்து வந்து அவளுக்குப் பணம் கிடைக்க வழி செய்தோம். அந்தத் திருடர்கள் வேறு ஓர் அப்பாவிப் பெண்ணை கடத்தி இங்கே கொண்டு வந்து துன்புறுத்திக் கொண்டிருந் தார்கள். நான் அவளையும் அவர் களிடமிருந்து விடுவித்தேன். அவள் தான் இந்தப் பெண். இவள் தன் சித்தியின் கொடுமைகளைத் தாங்க முடியாமல் வீட்டை விட்டு வெளி யேறி வந்தவள். நீ இந்தப் பெண்ணை மணந்து கொண்டு உன் பாட்டியுடன் சண்டை போடாமல் வாழ்'' எனக் கூறின.

கிழவியும், சுந்தரமும் அந்தப் பெண்ணுடன் பிசாசு கூறியபடியே நடந்தார்கள். சுந்தரம் அந்தப் பெண்ணை மணந்து கொண்டதோடு தன் பாட்டியை அக்கறையுடன் கவ னித்துக் கொண்டான்.



# செய்திச் சுடர்



## ராபர்ட்ஸின் திறன்!

லண்டனிலுள்ள ஐந்து வயதுச் சிறுமி டியா லாவர்ன் ராபர்ட்ஸ் என்பவள் பங்குச் சந்தைக் கூடத்திற்கே சென்றது இல்லை. ஆனால் அவள் பங்குகள் விற்பனை பற்றிய குறிப்புகளை அளிக்கிறாள். ஒரு குறிப்பிட்ட நாளில் 16 பிரபல நிறுவனங்களின் பங்குகள் 16 சதவீதம் சரிந்தன. ஆனால் அவள் அளித்த குறிப்புகளால் அப்பங்குகள் 5.8 சதவீதம் உயர்ந்தன. அதே நாளில் ஒரு பிரபலப் பங்குச் சந்தை விற்பன்னர் 46 சதவீதம் பங்குகளில் இழப்பை அடைந்தார். வேறொரு ஆரூடம் கூறியவருக்கோ 6.2 சதவீத இழப்பு ஏற்பட்டது. அந்த ஆண்டில் லாவர்ன் ராபர்ட்ஸ் அளித்த குறிப்புகளால் காட்பரிடி ஸ்வீபஸ், ப்ரூடன்சியல், பியர்சன் ஆகிய நிறுவனங்களின் பங்குகள் ஆதாயம் அளித்தன.

## களிப்பூட்டும் காடு



ஜன்தன் பஹாரி என்னும் பதினாறு வயதினன் தனக்குப் பள்ளிப் படிப்பும் வேண்டாம், பட்டண வாழ்வும் வேண்டாம் என்று தன்னைச் சந்திக்க வந்த அதிகாரிகளிடம் கூறினான். இந்த வாலிபன் மலேசியாவில் டிமோக் எனப்படும் சிறிய மலைச் சாதிக் கூட்டத்தைச் சேர்ந்தவன். அதிகாரிகள் அவனுக்குப் பல ஊக்கத் தொகைகள் கொடுப்பதாகக் கூறியும் அவன் தான் காட்டில் வசிப்பதையே விரும்புவதாகக் கூறிவிட்டான். அவன் பஹாங் மாநிலத்து மரங்கள் மிகுந்த ஒரு காட்டில் தன் குடும்பத்தவர் ஒன்பது பேர்களுடன் வாழ்ந்து வருகிறான். பட்டண வாழ்க்கையைவிட காட்டு வாழ்க்கையில் தான் அமைதியுடன் நிம்மதியாக இருக்க முடிகிறது என்கிறான். அவனது தந்தை பஹாரிகுபியும், ''நானும் என் சந்ததியாரும் காட்டிலேயே வாழ்வோம், காட்டிலேயேதான் மடிவோம்,'' எனப் பெருமையுடன் கூறி வருகிறார்!



# பெயர் பெற வழி!

வேதாசலமும் அருணாசலமும் அந்த ஊரில் பிரமுகர்கள். வேதாசலம் பெரும் பணக்காரன். அருணாசலமோ சாதாரண குடும்பத்தவன். ஆனால் அருணாசலத்திற்குத் தான் பேரும் புகழும் இருந்தது. ஏனெனில் அவன் எல்லோருக்கும் உதவி புரிந்து வந்தான். இதனால் பணக்காரனான தன்னைப் புகழாமல் சாதாரணப்பட்ட அருணாசலத்தையே புகழ்கிறார்களே என்று வேதாசலம் பொறாமைப் பட்டான்.

ஒருநாள் வேதாசலத்தைக் காண வெளியூரில் உள்ள அவனது உற வினன் தணிகாசலம் வந்தான். வேதா சலம் அவனிடம் தன் மனக்குறை யைக் கூறினான். தணிகாசலமும், ''இந்தக் காலத்தில் எதற்கும் விளம் பரம் வேண்டும். அப்போதுதான் பெயரும் புகழும் பெற முடியும். நீ செய்யும் செயலை வேறொருவன் பிறருக்கு எடுத்துக் கூற வேண்டும். இதற்கு ஒரு வழி சொல்கிறேன். இவ்வூர் சங்கர சாஸ்திரி மாபெரும் பண்டிதர். அவரிடம் முறையாக வேதம் கற்றவரை நம் மன்னர் ஆஸ்தான பண்டிதராக நியமித்துக் கொள்கிறார். ஆனால் அந்த சாஸ் திரியிடம் சீடனாக இருந்து வேதம் கற்பது மிகவும் சிரமம். சீடன் தன் வேலைகளைத் தானே செய்ய வேண்டும். அவனே மரத்தடியில் சமைத்துச் சாப்பிட வேண்டும். யார் வீட்டிற்குள்ளேயும் போகக் கூடாது. இரவில் யார் வீட்டுத் திண்ணை யிலாவது கட்டாந்தரையில் படுத்துத் தூங்கி அதிகாலையில் எழுந்து அங்கிருந்து போய்விட வேண்டும்.

- பாபநாசம் சாமா -



இந்த விதிகளுக்குக் கட்டுப்பட்டவனே அவரது சீடனாக முடியும். அவரது சீடனாக ஆவதற்கு எங்கள் ஊர் கணேசன் என்ற இளைஞன் அடுத்த வாரம் இங்கே வரப் போகிறான். நீ அவனை ஆதரித்து உன் வீட்டுத் திண்ணையை அவன் உபயோகித்துக் கொள்ள அனுமதி. அவன் உன்னைப் பற்றிப் பெருமையாக எல்லோரிடமும் சொல்வான்,'' என்றான்.

வேதாசலமும் ''சரி, அவன் இந்த ஊரில் முதலில் என்னைத் தான் வந்து பார்க்க வேண்டும் என்று சொல்லி அனுப்பு. அவன் அருணாசலத்திடம் போய்விடக் கூடாது,'' என்றான். தணிகாசலமும் கணேசனை அவனிடமே அனுப்பி வைப்பதாகக் கூறி விட்டுச் சென்றான். ஒரு வாரம் கழிந்தது. கணேசன் வந்து வேதாசலத்தைப் பார்த்தான். அவனிடம் ''நான் இந்த ஊர் சங்கர சாஸ்திரியிடம் வேதம் கற்க வந்திருக்கிறேன். உங்கள் தாராள மனம் பற்றி எங்களூர் தணிகாசலம் என்னிடம் கூறி உங்களை முதலில் பார்க்கச் சொன்னார். உங்கள் வீட்டுத் திண்ணையை இரவு வேளைகளில் நான் உபயோகித்துக் கொள்ள அனுமதிக்க வேண்டும்,'' என்று பணிவுடன் வேண்டினான்.

வேதாசலமும் பெருமை பொங்க ''நான் இந்த ஊரில் பெரிய பணக்காரன். யார் எது வேண்டும் என்றாலும் முதலில் என்னிடமே வருவார்கள். நீ தாராளமாக என் வீட்டுத் திண்ணையைப் பயன்படுத்திக் கொள்,'' என்றான். கணேசனும் தினமும் அதிகாலையில் ஆற்றிற்குப் போய்க் குளித்துவிட்டு அன்றைய சமையலுக்கு சுள்ளிகள் பொறுக்கி எடுத்து வந்து மரத்தடியே சமையல் செய்து சாப்பிட்டுவிட்டு வேத அத்தியனம் செய்யச் சென்றுவரலானான். இரவில் வேதாசலத்தின் வீட்டுத் திண்ணைக்குப் போய் தான் பனை ஓலைகளில் எழுதிக் கொண்டு வந்துள்ளதை அங்கே வைக்கப்பட்ட அகல் விளக்கு வெளிச்சத்தில் படித்துவிட்டுப் பிறகு தூங்குவான். அவ்வூரில் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் இரவில் எரிய அகல் விளக்குகளை ஏற்றி வைப்பது வழக்கம்.

நான்கு நாட்களாயின. கணேசனால் எந்தத் தொந்திரவும் இல்லை என்றாலும் அவன் தமக்கு பயன்படவில்லையே என்று வேதாசலத்தின்



இடைஞ்சல் ஏற்படுவதைக் கண்ட அவன் மறுநாள் அவர்களிடம் தனக்கு அவர்களது வேலைகளைச் செய்ய நேரமில்லை என்று கூறிவிட்டான்.

இதைக் கேள்விப்பட்ட வேதாசலம் கோபம் கொண்டான். அதனால் அவன் கணேசனிடம் ''நீ இரவில் வெகுநேரம் படிப்பதால் விளக்கிற்கு நிறைய எண்ணெய் விட வேண்டி இருக்கிறது. அதற்கான பணத்தை நீதான் கொடுக்க வேண்டும்,'' என்று கண்டிப்புடன் கூறினான்.

இதனால் கணேசன் மறுநாள் முதல் வேதாசலத்தின் வீட்டுத் திண்ணையில் படுக்காமல் அருணாசலத்தின் வீட்டுத் திண்ணைக்குப் போய் படுக்கலானான். அங்குள்ள விளக்கு வெளிச்சத்தில் படித்து வரலானான். இதைக் கண்ட வேதாசலம் அருணாசலத்தைத் தன் வீட்டிற்கு அழைத்து ''அந்த கணேசனை உன் வீட்டுத் திண்ணையில் படுக்க விடாதே. அவன் உன் வீட்டு வாசல் விளக்கு வெளிச்சத்தில் படிப்பதால் உனக்கு எண்ணெய்ச் செலவுதான் அதிகமாகும். அது மட்டும் அல்ல. அவனுக்குப் பிறரை மதிக்க வேண்டும் என்றும், செய்த உதவிக்கு நன்றி செலுத்த வேண்டும் என்றும் எண்ணமே இல்லை. நீயே பார். என் வீட்டுத் திண்ணையில் படுத்துக் கொள்கிறான். ஆனால் என் மனைவியையோ அல்லது மற்றவர்களையோ சற்றும் மதிப்பது இல்லை. அவர்கள் ஏதாவது ஒரு சிறு வேலையைச் செய்யச் சொன்னால் கூட தனக்கு

குடும்பத்தினர் நினைத்தார்கள். கணேசனும் ஊராரிடம் தன்னைப் பற்றிப் புகழ்ந்து கூறவில்லையே என்று வேதாசலமும் எண்ணினான். அவனது மனைவியோ கணேசன் தனக்கு மரியாதை காட்டுவதில்லை என்று கணவனிடம் கூறிக் குறைபட்டுக் கொண்டாள். அவளது குழந்தைகளோ இரவில் அவன் வந்து தமக்குக் கதைகள் கூறுமாறு நச்சரித்தன.

கணேசனோ ''எனக்கு படிப்பு முக்கியம். என்றாலும் இந்த வீட்டுக்காரர்களுக்கு உதவுகிறேன்,'' என்றான். இதன் பயனாக அந்த வீட்டில் உள்ள ஒவ்வொருவரும் கணேசனிடம் ஏதாவது ஒரு வேலையைச் சொல்லி அதைச் செய்ய வைத்தனர். தன் படிப்பிற்கு அவ்வாறு செய்வதால்

நேரமில்லை என்றும், தனக்குப் படிப்பு தான் முக்கியம் என்றும் அலட்சியமாகப் பதில் கூறுகிறான். அவன் படிப்பதற்கு நான் விளக்கைக் கொடுத்து அதில் விடும் எண்ணெய்க் குப் பணம் செலவு செய்கிறேன் என்பதை மறந்துவிட்டான் நன்றி கெட்ட அவன்,'' என்றான்.

அருணாசலமோ, ''அடடா! அந்த மங்கிய வெளிச்சத்திலா அவன் படிக்கிறான்? இது எனக்குத் தெரி யாமல் போயிற்றே. இன்று முதல் விளக்கில் நிறைய எண்ணெய் விட்டுப் பிரகாசமாக எரிய வைக் கிறேன். அவன் சிரமப்படாமல் படிக்கட்டும்,'' என்று கூறிவிட்டுப் போனான். கணேசனின் இந்தச் செய்கையால் ஊரார் வேதாசலத்தின் வக்கிரபுத்தியை அறிந்து அவனை இகழ்ந்தார்கள். அவனுக்குப் புகழ்ச் சிக்குப் பதில் இகழ்ச்சியே கிடைத் தது. புகழ் அருணாசலத்திற்கே கிடைத்தது.

சில நாட்களுக்குப் பின் வேதா சலத்தைக் காண வந்த தணிகாசலம் நடந்ததை எல்லாம் கேட்டுவிட்டு ''உனக்கு ஓர் அரிய வாய்ப்பை அளித்தேன். நீ அதைத் தவறவிட்டு விட்டாய். இதோ பார். நீ ஒருவனுக்கு உதவிவிட்டு அவனிடமிருந்து பதி லுக்கு நீ ஆதாயம் தேடுகிறாய். இந்த மனப்பான்மை மாறி பதிலுக்கு எதையும் எதிர்பாராமல் நீ பிறருக்கு உதவி செய்தாலே உனக்குப் பெயரும் புகழும் கிடைக்கும். அருணாசலத் தைப் பார்! அவன் கணேசனிடம் எந்த வேலையையும் செய்யச் சொல்ல வில்லை. எதையும் எதிர்பாராமல் அவன் கணேசனுக்கு உதவி வரு கிறான். அதனால்தான் அவன் புகழ் ஓங்குகிறது. நீயோ அவனுக்குப் பெரி தாக எந்த உதவியும் செய்துவிட வில்லை. ஆனால் உன் வீட்டுத் திண்ணையில் அவன் படுத்ததற்காக அவன் உன் வீட்டு வேலைகளைச் செய்வான் என்று எதிர்பார்த்தாய். எல்லாவற்றிற்கும் மனம் தான் காரணம். அதைத் தெரிந்து கொள்!'' என்றான்.

வேதாசலமும் மௌனமாக அவன் கூறிய வழியே சிறந்தது என ஏற்றுக் கொண்டான்.



# ராஜஸ்தான் கிராமியக் கதை

ராஜஸ்தான் என்று கூறினாலே எல்லோருடைய நினைவிற்கும் வருபவை பலமிக்க கோட்டைகள், பரந்த பாலைவனம், அம்பாரியுடன் செல்லும் ஒட்டகங்கள், வீரதீர மக்கள், அரவல்லி மலையிலிருந்து தார் பாலைவனம் வரை பரவியுள்ள இப்பகுதியில் பல கண்கவர் இயற்கைக் காட்சிகளைக் காணலாம். இந்தியாவிலுள்ள ஒரே பாலை வனம் இந்தத் தார் பாலைவனமே.

முன்பு இதில் பல ராஜ்ஜியங்களும் சமஸ்தானங்களும் இருந்தன. 1956ல் 19 அரசர்களின் சமஸ்தானங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு ராஜஸ்தான் மாநிலம் உருவாக்கப்பட்டது. இதன் பரப்பளவு 342,239 சதுர கி.மீ.

ராஜஸ்தானைச் சுற்றி மத்தியப் பிரதேஷ், உத்திரப் பிரதேஷ், குஜராத், பஞ்சாப், ஹரியானா ஆகிய மாநிலங்கள் உள்ளன. இதன் மேற்கில் பாகிஸ்தானின் எல்லைப் பகுதியும் கணிசமாக உள்ளது.

இம்மாநிலத்தின் மக்கள்தொகை 56,473,122. ஜெய்பூர் இதன் தலைநகர். ஹிந்தி இம்மாநிலத்தின் ஆட்சிமொழி. ராஜஸ்தானியும் ஆங்கிலமும் இங்கு பேசப்படும் பிற மொழிகள். ஹிந்தியிலிருந்து வந்த வட்டார மொழிகளான மார்வாரி, மேவாரி, ஹதோடி, மேவாடி முதலியனவும் பேசப்படுகின்றன.

## வாக்கை நிறைவேற்றிய மகள்

டாகுர் ஹரி சிங் இனி தான் அதிக நாட்கள் வாழப் போவதில்லை என்று தெரிந்து கொண்டான். அவன் தன் குடும்பத்தவரைத் தன்னருகே அழைத்தான். அவனுடைய ஒரே மகள் லஹரீலி ஐந்தே வயதானவள். அவளும் எல்லோருடனும் சேர்ந்து நின்றாள். அப்போது டாகுர் ஹரிசிங் "என் வாழ்வில் செய்ய வேண்டியதை எல்லாம் செய்து முடித்துவிட்டேன். என் கடைசி இரு விருப்பங்கள் மட்டும் நிறைவேற்றப்பட வேண்டும்," என்றான்.



லஹரீலியும் ''அவை என்ன அப்பா?'' என்று கேட்டாள். டாகுர் ஹரி சிங்கும் ''என் வீட்டில் தோடர் மல் பாடப்பட வேண்டும்,'' என்றான். தோடர்மல் என்பது ஒரு பாடல். இது வீட்டின் மகன் மணமானதும் தன் மனைவியை அழைத்துக் கொண்டு வரும்போது அவன் வீட்டுப் பெண்கள் பாடும் பாடல். எனவே ஆண் குழந்தையே பிறக்காத டாகுர் ஹரி சிங் வீட்டில் இது எவ்வாறு நடக்கும்? அப்போது ஒருவர் டாகுரிடம், ''ஒரு பையனை நீ தத்து எடுத்துக் கொண்டாலே இது நடக்கும்,'' என்றார்.

ஹரி சிங்கோ, ''இப்போது முடியாது. எனது அடுத்த விருப்பம் புகழ் பெற்ற குஜராத் குதிரைகள் சிலவற்றை என் குடும்பத்தினரின் உபயோகத்திற்காக இங்கு கொண்டு வர வேண்டும்,'' என்றான். 'இதுவும் முடியாதே!' என்று சிலர் முணுமுணுத்தார்கள். ஒருவனோ, ''உனக்கு ஒரு வீரமகன் பிறந்திருந்தால் இதெல்லாம் நடக்கும்,'' என்றான்.

அப்போது சிறுமி லஹரீலி ''தந்தையே! உங்கள் விருப்பங்களை நான் நிறைவேற்றுகிறேன்,'' என்று கூறி டாகுரின் கைகளைப் பரிவுடன் பற்றினாள். டாகுர் அவளை உற்றுப் பார்த்து அவள் தான் சொன்னதைச் செய்து முடிப்பாள் என நம்பினான். அவன் தன் கைகளை உயர்த்தி அவளுக்கு ஆசிகள் அளித்தவாறே உயிர் துறந்தான்.

லஹரீலி பெரியவளானதும் தன் தந்தையின் விருப்பங்களை நிறைவேற்ற ஆண் வேடத்தில் கிளம்பினாள். அவளது தலைமுடியை ஒரு ராஜஸ்தானிய முண்டாசு மறைத்தது. ஒரு வாளுடன் அவள் ஒரு குதிரை மீது அமர்ந்து குஜராத்தை நோக்கிச் சென்றாள். வழியில் வேறு இருவரும் குதிரைகளுக்காக குஜராத் சென்று கொண்டிருப்பதைக் கண்டு அவள் அவர்களோடு சேர்ந்து கொண்டாள். அவர்களில் ஒருவன் ராஜபுத்திர வீரன். மற்றவன் எடுபிடி வேலையாள். மூவரும் பேசிக் கொண்டே குஜராத்தின் தலைநகரை அடைந்தார்கள்.



அங்கு உயர்ரகக் குதிரைகள் கிடைப்பவை. குஜராத் மன்னனின் குதிரைகள் ஒரு பெரிய மைதானத்தில் விடப்பட்டு அதைச் சுற்றி

கடுமையான காவலும் இருந்தது. அங்கு காவல் புரியும் வீரர்களைத் தோற்கடித்த யாரும் அங்கிருந்து எவ்வளவு குதிரைகளை வேண்டு மானாலும் ஓட்டிச் செல்லலாம் என்று மன்னன் அறிவித்தும் இருந் தான். போர் வீரர்களுடன் போரிட விரும்புவோர் அங்கு வைக்கப் பட்டுள்ள முரசைக் கொட்ட வேண் டும். ஆனால் யாருமே முரசைக் கொட்டவில்லை.

லஹரீலி தான் முரசைக் கொட்டி வீரர்களுடன் போர் புரிவதாகக் கூறி ராஜபுத்திர வீரனிடம் குதிரைகளைத் தேர்ந்து எடுக்கச் சொன்னாள். அவ னும் அதற்கு இணங்கினான். அந்த வீரனும் வேலையாளும் குதிரை களைப் பார்க்கச் சென்றார்கள். ஆண் வேடத்தில் இருந்த லஹரீலி முரசை



அடித்தாள். முரசொலி கேட்டு வீரர் கள் வந்தார்கள். ஆனால் தங்களை எதிர்க்க ஒரு வீரன் மட்டும் நிற்பது கண்டு அவர்கள் "நாங்கள் ஒரே ஒரு வீரனுடன் போரிட மாட்டோம். பெரிய படை இருந்தாலே போரிடு வோம்," என்றார்கள்.

லஹரீலியோ, "நானே ஒரு பெரிய படைக்குச் சமம். என்னுடன் போரிட் டால் உங்களை எல்லாம் தோற் கடித்துவிடுவேன்," என்று கூறினாள். அப்படைத் தலைவனோ, "எங்களு டன் நீயா தனியாகப் போரி புரியப் போகிறாய்? உனக்கு மீசை கூட முளைக்கவில்லையே!" எனக் கூறி அட்டகாசமாகச் சிரித்தான். அப் போது லஹரீலி "நான் என் வாளைத் தரையில் குத்தி நிறுத்துகிறேன். அதை உங்களில் யாராவது வெளியே எடுக்க முடியுமா? முதலில் உங்கள் பலத்தை அதில் காட்டுங்கள், பார்க்கலாம்!" என்றாள்.

படைத் தலைவனும் "இந்த வாளை உருவி எடுத்துவிட்டால் நாங்கள் வென்றதாகத் தானே கொள் வாய்?" என்று கேட்டான். லஹரீலி யும் "ஆமாம். ஆனால் உங்களில் யாராலும் இதை உருவி எடுக்க முடியாவிட்டால் நான் வெற்றி பெற்றதாகக் கொள்ள வேண்டும். சம்மதமா?" என்று கேட்டாள். அவனும் சம்மதம் என்றான்.

வீரர்கள் ஒவ்வொருவராக வந்து அந்த வாளைத் தரையிலிருந்து உருவி எடுக்க முயன்றார்கள். யாராலும் அதை எடுக்க முடியவில்லை. படைத்



## கலையும் கைவினைகளும்

வண்ண ஓவியக் கலை ராஜஸ்தானத்தின் அரிய கலை. இந்திய வண்ண ஓவியக் கலையில் முக்கிய இடம் பெறும் ராஜஸ்தானில் மேவார், கோடா, பிகானீர், ஜெயபூர், மார்வார் எனப் பல பகுதிகளின் தனிச் சிறப்புகள் இக்கலைக்கு பெருமை அளிப்பவை. கோடாக் கலைப் பகுதி அழகிய இயற்கைக் காட்சிகளை அளிக்கின்றது. கிருஷ்ணரது லீலைகள் எல்லாப் பகுதிகளிலும் ஓவியங்களில் தீட்டப்படுகின்றன.

ராஜஸ்தான் நகைகள் செய்வதிலும் தன் திறமையை வெளிப் படுத்துகிறது. முகலாய ஆட்சிக் காலத்தில் தங்க நகைகள் செய்வதில் இது முன்னணியில் நின்றது.

தங்க முலாம் கொடுப்பதிலும் இது சிறந்து விளங்கியது. இதில் ஜெயபூர் முதலிடம் பெறுகிறது. வைரக் கற்களை நகைகளில் பொருத்துவதிலும் இது தன் திறனைக் காட்டி வருகிறது. இன்றும் இந்த முலாம் பூசும் கலை எல்லா உலோகங்களிலும் மிளிர்கிறது.

தலைவனும் முயன்றான். அவனாலும் உருவி எடுக்க முடியவில்லை. அவன் தான் தோற்றதாக ஒப்புக் கொண்டு தன் படை வீரர்களோடு அங்கிருந்து போய்விட்டான்.

அதன் பிறகு லஹரீலி தான் குத்திய வாளைத் தரையிலிருந்து உருவி எடுத்தாள். அவள் வாளை பலமாக இழுக்கையில் அவளது தலைப் பாகையான முண்டாசு நழுவிக் கீழே விழுந்தது. அவளது அழகிய கூந் தலை ராஜபுத்திர வீரனும் அவனது வேலையாளும் கண்டு, ''ஆ! நீ பெண்ணா?'' என்று கூவினார்கள்.

ராஜபுத்திரவீரன் அவளைப் பார்த்து ''நீ ஏன் ஆண் வேஷத்தில் வந்தாய்?'' என்று கேட்டான். லஹரீலி தன்னைப் பற்றி விவரமாகக் கூறினாள். அதைக் கேட்ட அந்த வீரன் ''உன் துணிச்சலைப் பாராட்டு கிறேன். பெண்களும் ஆண்களுக்குச் சமமாகப் போர் புரிந்து வெற்றி பெற முடியும் என்பதை நீ நிரூபித்து விட்டாய்,'' என்று கூறி அவளை பாராட்டினான்.

ஆனால் அவளோ, ''இன்னமும் என்னுடைய வேலை முடிய வில்லை. என் வீட்டில் தோடர்மல் பாடல் பாடப்பட வேண்டும். அதற் காக இந்த ஆண் வேஷம் இன்னமும்



தேவைப்படுகிறது,'' என்றாள். அவனோ ''உன்னை எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. என்னை நீ மணந்து கொள்கிறாயா?'' என்று கேட்டான்.

அவளும் ''மணந்து கொள்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. நான் மணமகனாக ஊர்வலம் வந்து உன் வீட்டை அடைவேன். அப்போது நீ மணப்பெண்ணின் வேடத்தில் இருக்க வேண்டும். உன்னைக் கூட்டிக் கொண்டு என் ஊருக்குப் போவேன், சரியா?'' என்று கேட்டாள்.

அந்த வீரனும் முகத்தைச் சுளித்தவாறே, ''பெண் வேடமா? நான் ஓர் ஆண்மகன். அதெல்லாம் முடியாது,'' என்றான். அப்போது லஹரீலி தான் சிறுவயதில் தன் தந்தைக்கு அவர் இறக்கும்போது கொடுத்த வாக்குகளைப் பற்றிக் கூறினாள். அவனுக்கு மகனே இல்லாததால் தானே அதை நிறைவேற்ற உறுதி கொண்டதையும் அவள் கூறினாள்.

# கோட்டைகளும் அரண்மனைகளும்

ராஜஸ்தான் பல கோட்டைகளையும் அரண்மனைகளையும் கொண்டுள்ளது. கோட்டைகளெல்லாம் நதிக்கரைகளில் கட்டப்படாமல் குன்றுகளின் மீதே நிர்மாணிக்கப்பட்டுள்ளன. இவை மற்ற கோட்டைகள் போல அகழிகளால் சூழப்படவில்லை. இவற்றின் மீதிருந்து சுடப்படும் துப்பாக்கி, பீரங்கி குண்டுகள் சரியான குறியில் விழும். இவற்றில் பழைய சித்தூர் கோட்டை தனியான குன்றின் மீது உள்ளது. தான்தாம்போர், ஜெய்சால்மீர், ஆம்பர், நாஹாகட், புண்டி, ஜோத்பூர், பிகானீர் கோட்டைகள் புகழ் பெற்றவை.

மன்னர்கள் நிறைந்திருந்த மாநிலமாதலால் இங்கு பல கோட்டைகளைக் காணலாம்ட. ஜெயபூரின் ஆம்பர் கோட்டை ராஜபுதனக் கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டாகும். உதயபூரின் ஏரி அரண்மனையும் மற்றொரு சிறப்பான அரண்மனையாகும். இது ராஜஸ்தானிலேயே மிகப் பெரியதாம். ஜெயபூர் அரண்மனையும் ஜெய்சால்மீர் அரண்மனையும் புகழ்பெற்றவை.

# பார்க்கத் தக்க இடங்கள்



ராஜஸ்தானின் தலைநகர் ஜெய்பூர் சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்து இழுக்கிறது. இங்குள்ள ஹவா மஹலும் ஜந்தர்மந்தரும் பார்க்க வியப்பளிப்பவை. இம்மாநிலத்தின் ஒரே கோடைவாசத்தலம் மௌன்ட் ஆபு பாலைவனச் சோலையாக ராஜஸ்தானில் திகழ்கிறது. தில்வாராவிலுள்ள ஜைன ஆலயம் சிற்பக் கலைக்கும் வேலைப்பாடுகளுக்கும் எடுத்துக்காட்டு.

இங்கு பலவித மிருகங்களையும் பறவைகளையும் காண முடியும். பரத்பூர் தேசியப் பூங்கா உலகின் சிறப்புமிக்கதாம். இதுபோல் ரான்தாம்போர் தேசியப் பூங்காவும் பல புலிகளைக் கொண்டு சிறப்பு பெற்றதாம்.

அப்போதும் அந்த வீரன் தயங்கவே, அவனது வேலையாள் ''இதற்குச் சம்மதியுங்கள். இந்த வேஷம் கொஞ்ச நேரத்திற்குத் தானே. இவளைப் போல வேறு பெண் உங்களுக்குக் கிடைக்க மாட்டாள். இவளைப் பற்றி நாம் நன்கு அறிவோம். துணிச்சலும் வீரமும் கொண்டவள் என்பதையும் நாமே பார்த்தோம். எனவே நீங்கள் பெண் வேடம் பூண்டு ஆண் வேடத்தில் வரும் இவளை மணந்து கொள்ளுங்கள். அதுதான் எல்லோருக்கும் நல்லது,'' என்று அறிவுறுத்தினான். அந்த வீரனும் நன்கு யோசித்து அந்தத் திட்டத்திற்குச் சம்மதித்தான்.



லஹரீலி ஆண் வேடத்தில் போய் பெண் வேடத்தில் இருந்த வீரனை மணந்து கொண்டு தன் ஊருக்கு 'அவளு'டன் வந்தாள். அந்த வீட்டில் பெண்கள் தோடர்மல் பாடலைப் பாடினார்கள்.

இவ்வாறு சிறுமியாக இருந்த லஹரீலி பெரியவளானதும் தன் தந்தையின் விருப்பங்களை நிறைவேற்றிவிட்டாள்!

# நம் இந்தியா

*இம்மாத வினாக்கள் நம் நாட்டிலும் உலக அளவிலும் நடந்த விளையாட்டுப் போட்டிகள் பற்றியவை. நமது சில விளையாட்டு வீரர்கள் உலக சாதனைகள் புரிந்துள்ளார்கள்.*

1. முதலாவது ஆசிய விளையாட்டுப் போட்டிகள் எங்கு, எப்போது நடந்தன?
2. புதுடில்லியில் 1982ல் நடந்த ஆசிய விளையாட்டுப் போட்டிகளைக் குறித்த சின்னம் எது?
3. எந்த விளையாட்டு வீரர் 9வது ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் 20 கி.மீ. நடைப் பந்தயத்தில் தங்கப் பதக்கம் பெற்றார்?
4. ஒலிம்பிக் போட்டிகளில் 1908லிருந்து எவ்வளவு முறை ஹாக்கி சாம்பியனாக இந்தியா வெற்றி பெற்றது?
5. ஒலிம்பிக் போட்டிகளில் எந்த விளையாட்டு வீராங்கனையாவது எதிலாவது கடைசிப் போட்டி வரை சென்றது உண்டா?
6. ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் முதலில் தங்கப் பதக்கத்தை வென்ற வீராங்கனை யார்?
7. சில விளையாட்டுகளில் இவை அளிக்கப்பட்டன. அந்த விளையாட்டுகள் யாவை?

   ராணி ஜான்ஸி ட்ராஃபி     சுப்ரோதோ கப்     முத்தையா கப்
8. சில இந்திய விளையாட்டு வீரர்கள் இச்செல்லப் பெயர்களால் குறிப்பிடப் படுகிறார்கள். அவர்கள் யார்?

   அ) ஃப்ளையிங் சிக்     ஆ) தி லிட்டில் மாஸ்டர்     இ) தி விஜர்ட்
9. இங்கிலீஷ் கால்வாயை நீந்திக் கடந்த முதலாவது இந்தியர் யார்? எப்போது? 1960ல் அவரே வேறொரு சிறப்பைப் பெற்றார். அது என்ன?
10. முதன்முதலாக எந்த இந்தியர் பாட்மிண்டனில் உலகப் பட்டம் பெற்றார்? தேசிய ஜுனியர் சாம்பியன் எந்த ஆண்டில் வெற்றி பெற்றார்?
11. உலகிலேயே உயர் கிரிக்கெட் பிட்ச் இந்தியாவில் உள்ளது. அது எங்கே?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## ஜனவரி 2003 வினாக்களின் விடைகள்

1. 10,000 மெகா வாட்.
2. 1983.
3. ஜெர்மனி.
4. பிருத்வி.
5. ராகேஷ் சர்மா - ஏப்ரல் 3, 1984. கல்பனா சாவ்லா - அக்டோபர் 19, 1997.
6. 1957.
7. 1953.
8. கோல்கத்தா - 1954 - புதிய தலைமைச் செயலகம் (14 மாடிகள்).



# விநாயகர்

கிருஷ்ணரது ஆச்சரியத்தைக் கண்டு ருக்மிணி சிரித்தவாறே, ''ஆமாம். அந்தப் பெண்ணிற்குத் தான் உங்கள் மீது எவ்வளவு ஆசை! அவளைக் கண்டால் நீங்கள் எங்கே என் கைவிட்டு நழுவிப் போய்விடப் போகிறீர்களோ எனப் பயப்படு கிறேன். உங்களை ஜாக்கிரதை யாகவே கண்காணிக்கத்தான் வேண் டும். நீங்கள் யாரிடம் சிக்கிக் கொண் டாலும் என்னைவிட்டுப் பிரிய மாட்டீர்கள் என்பது எனக்குநன்கு தெரியும். நானும் என் பக்தியால் உங்களைக் கட்டி வைக்க முடியும்,'' என்றாள்.

கிருஷ்ணரும் ''பேஷ், பேஷ். பக்தி சாகரத்தில் ஒரேயடியாக என்னை மூழ்கடித்துவிடப் போகி றாய். நான் மூச்சுத் திணறித் திக்கு முக்காடப் போகிறேன்!'' என்றார் வேடிக்கையாக. இப்படியாகச் சில நாட்கள் கழிந்தன. இதற்குள் கிருஷ்ணர் தான் சியமந்தகமணியைக் கவர்ந்து சென்றுவிட்டார் என்ற வதந்தி எங்கும் பரவியது. இதனைப் பரப்பியவன் சத்திராஜித்தே.

தன் மீது சுமத்தப்பட்ட அபாண் டம் பற்றி யோசித்துக் கொண்டிருப் பதில் பயனில்லை எனக் கிருஷ்ணர் எண்ணி ''விநாயகரே! இப்படி ஓர் ஆட்டம் ஆடி முடிவில் கருணை காட்டுகிறாயா? செய், செய்!'' என்று எண்ணித் துதித்துவிட்டு சியமந்தக மணியைத் தேடிக் கொண்டு காட் டிற்குச் சென்றார்.

ஆனால் உண்மையில் என்ன



நடந்தது? சத்திராஜித் தன் மகளான சத்தியபாமாவை தன் மருமகனான சதத்துவனன் என்பவனுக்கு விவாகம் செய்து வைக்க நினைத்தான். எனவே அவன் தன் தம்பியான பிரசேனஜித் தனை சதத்துவனனுடன் பேசி முடிவு செய்ய அனுப்பினான். பிரசேனஜித் தன் சியமந்தகமணியை அணிந்து கொண்டு காட்டு வழியாகச் சென்ற போது ஒரு சிங்கம் அவனது கழுத்தில் மின்னும் மணியைக் கண்டது. அதன் ஒளி அதனைக் கவரவே சிங்கம் பிரசேனஜித்தன் மீது பாய்ந்து கொன்றது. அந்த சிங்கத்தை ஜாம்ப வான் கொன்று அதனிடமிருந்து மணியை எடுத்துப் போய்த் தன் புதல்வியான ஜாம்பவதியிடம் கொடுத்தான்.

கிருஷ்ணர் சியமந்தகமணியைத் ...னார். காட்டில் இறந்து கிடக்கும் பிரசேனஜித்தனையும் சிங்கத்தையும் அவர் கண்டார். அவர்களருகே பதிந்த ஜாம்பவானின் கால் சுவடுகளைப் பின்பற்றி அவர் அவனது குகையை அடைந்தார்.

குகைக்குள் ஜாம்பவதி சியமந்தக மணியைப் பந்து போலத் தூக்கிப் போட்டு விளையாடிக் கொண்டிருப்பதை அவர் கண்டார். காட்டில் ஆதரவற்றுக் கிடந்த குழந்தையாக இருந்த ஜாம்பவதியை ஜாம்பவான் எடுத்து வளர்த்து வந்தான்.

அந்த மணியை எடுக்க கிருஷ்ணர் ஜாம்பவதியின் கைகளைப் பிடித்தார். ஜாம்பவதி தன் கைகளைப் பிடிப்பிலிருந்து விடுவித்துக் கொள்ள முடியாமல் கிருஷ்ணரையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

அப்போது ஜாம்பவான் குகைக்குள் வந்தான். அவன் கிருஷ்ணரைத் தாக்கினான். இருவருக்கும் பல நாட்கள் சண்டை நடந்தது. முடிவில் கிருஷ்ணர் தம் முஷ்டியால் ஜாம்பவானின் மார்பில் ஓங்கி ஒரு குத்து விட்டார். அப்போது தான் ஜாம்பவானுக்கு இராமபிரானே கிருஷ்ணராக அவதாரம் எடுத்திருக்கிறார் என்பது தெரிந்தது.

அவன் கிருஷ்ணரை வணங்கி ''கிருஷ்ணா! நீ ஜாம்பவதியின் கைகளை பிடித்ததால் நீயே அவள் கணவன்,'' எனக் கூறி சியமந்தக மணியையும் ஜாம்பவதியையும கிருஷ்ணரிடம் ஒப்படைத்தான்.

ஜாம்பவானையும் ஜாம்பவதியையும் அழைத்துக் கொண்டு துவார

கையை அடைந்த கிருஷ்ணர் சிய மந்தகமணியை சத்திராஜித்திடம் சேர்ப்பித்தார். சத்திராஜித்திடம் ஜாம் பவான் நடந்ததை எல்லாம் கூறவே அவன் மனம் வருந்தி, ''கிருஷ்ணா! சியமந்தகமணி போய் விட்டதே என்று உன் மீது அபவாதம் சுமத் தினேன். நான் செய்த இந்தக் குற்றத் திற்கு அபராதம் போல இந்த சிய மந்தகமணியை உனக்குக் கொடுப்ப தோடு என் மகள் சத்தியபாமாவை யும் அளிக்கிறேன். ஏற்றுக் கொள்!'' என வேண்டினான்.

கிருஷ்ணரும் சியமந்தகமணியை யும் சத்தியபாமாவையும் ஏற்றுக் கொண்டு பின்னர் அந்த மணியை சத்திராஜித்திற்கே கொடுத்துவிட் டார். அப்போது சத்தியபாமா தன் தந்தையிடம் ''பார்த்தீர்களா அப்பா! எனக்கு சியமந்தகமணியைவிட உயர்ந்த மணி கிடைத்துவிட்டது. நான் விநாயகரை வழிபட்டு வந் தேன். அவர் என் விருப்பத்தை நிறை வேற்றி வைத்தார்,'' என்று கூறி விநா யகரையும் மனதில் தியானித்தாள்.

விநாயகரும் அப்போது ஆகாயத் தில் தோன்றி ''ஆகா! சத்தியம் சேர வேண்டிய இடத்தில் தான் இருக் கிறது. இந்த சியமந்தகமணியின் கதையை கேட்டவர்களுக்கு வீண் அபவாதமும் பழியும் வராது,'' எனக் கூறி மறைந்தார்.

சத்திராஜித்தும் கிருஷ்ணருக்கு சத்தியபாமாவை முறைப்படிக் கல் யாணம் செய்து கொடுத்தான். அந்த விவாகம் சிறப்பாக நடந்தது. அதன்



பிறகு கிருஷ்ணர் ஜாம்பவதியையும் மணந்து கொண்டார்.

அப்பொழுது ஜாம்பவான், ''கிருஷ்ணா! நீங்கள் இராமாவதாரம் எடுத்தபோது உங்களுடன் சண்டை போட்டுப் பார்க்க வேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டு வந்தது. இப் போது என் நெடுநாளைய விருப்பம் நிறைவேறிவிட்டது. இனி தவம் செய்யக் காட்டிற்குச் செல்கிறேன்,'' எனக் கூறி விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான்.

கொஞ்ச காலத்திற்குப் பின் சத தன்யன் சத்திராஜித்தைக் கொன்று சியமந்தக மணியை எடுத்துக் கொண்டு கிருதவர்மனுடன் ஓடி னான். கிருஷ்ணர் விடவில்லை. அவர்களைத் துரத்திப் பிடித்து அவர் களிடமிருந்து மணியைக் கைப்பற்றி னார். அது தந்தையின் நினைவாக சத்தியபாமாவிடம் இருக்கட்டும் என



அவர் அதனை சத்தியபாமாவிடம் கொடுத்தார்.

கிருஷ்ணர் ஆண்டுதோறும் விநாயக சதுர்த்தியை விமரிசையாகக் கொண்டாடி வந்தார். சியமந்தகமணி இருந்த காரணத்தால் சத்தியபாமாவின் அந்தப்புரம் தங்கத்தால் நிரம்பி விட்டது. அதனால் பட்டாடைகளையும் வைரங்களையும் நவரத்தினங்களையும் ஆபரணங்களையும் அவள் வாங்கிக் குவித்துக் கொண்டாள். தன்னை மிஞ்சிய பணக்காரி யாருமே இல்லை என்ற எண்ணம் தலை தூக்கியது. கிருஷ்ணரும் தன்னைத் தவிர, மற்ற மனைவிகளிடம் பிரியமாக இருக்க மாட்டார் என்றே அவள் நினைத்தாள்.

கிருஷ்ணரின் மனைவி ஜாம்பவதி நன்கு வீணை வாசிப்பவள். ஒரு நாள் நாரதர் ஆகாய வழியாக தன் [illegible]யை மீட்டி இசைத்துக் கொண்டு சென்றபோது திடீரென ஓர் அசரீரி வாக்கு ''நாரதா! வீணை இசைப்பதில் நீ உனக்கு நிகர் யாருமே இல்லை என எண்ணி உன் வாசிப்பில் நீயே மகிழ்ந்து கொள்கிறாயே!'' என்றது.

நாரதரும் ''ஓ! நான் யாரிடம் கற்றுக் கொள்ள வேண்டுமாம்?'' என நினைக்கையில் அவர் முன் விநாயகர் தோன்றி ''ஜாம்பவதி வீணை வாசிப்பதில் நல்ல தேர்ச்சி பெற்றவள் என்பது தெரியுமா?'' என்று கேட்டார். உடனே நாரதர் கிருஷ்ணரை அணுகி ஜாம்பவதியிடம் வீணை வாசிப்பில் பயிற்சி பெற அனுமதி பெற்றுக் கொண்டார்.

ஒருமுறை கிருஷ்ணர் ருக்மிணியின் அந்தப்புரத்தில் இருக்கும்போது நாரதர் தேவலோகத்திலிருந்து பாரிஜாத மலரைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தார். கிருஷ்ணரும் அதை ருக்மிணியிடம் கொடுத்தார். அந்த சங்கதி கேட்டு சத்தியபாமா மனம் புழுங்கினாள்.

கிருஷ்ணர் சத்தியபாமாவிற்கு இந்திரலோகத்திலிருந்து பாரிஜாத மரத்தையே வரவழைத்து கொடுத்து அதனை அவளது பூங்காவில் நடவும் நட்டார். சத்தியபாமா அப்போது முதல் கிருஷ்ணரைத் தன் பிடிப்பிலிருந்து நழுவிவிடாமல் இருக்கப் பார்த்துக் கொண்டாள்.

ஒருமுறை சத்தியபாமா புண்ணியக விரதம் மேற்கொண்டபோது நாரதர் வந்து கிருஷ்ணரை அவளிடமிருந்து தானமாகப் பெற்றுவிட்டார்.

சத்தியபாமா கிருஷ்ணரை விடுவிக்க அவரது எடைக்குத் தங்கம் கொடுப்பதாக நாரதரிடம் கூறவே அவரும் அதற்குச் சம்மதித்தார். தராசு கொண்டு வரப்பட்டது. ஒரு தட்டில் கிருஷ்ணர் உட்கார வைக்கப்பட்டார். மற்ற தட்டில் சத்தியபாமா தன்னிடமுள்ள தங்கத்தை எல்லாம் கொண்டு வந்து வைத்தாள். அது தாழவில்லை. வைரங்கள், நகைகள் என்றெல்லாம் வைத்தும் தட்டு கீழே வரவில்லை.

சத்தியபாமாவின் கர்வம் அடங்கியது. அவள் கிருஷ்ணரை விடுவிப்பதற்காக அப்போது ருக்மிணியின் உதவியை நாடினாள். ருக்மிணியும் அவளிடம் ''அட பைத்தியமே! கிருஷ்ணரை பணத்தால் வாங்க முடியுமா? பக்தியால்தான் பெற முடியும். இதோ பார். பக்தியுடன் ஒரு துளசி இலையை சமர்ப்பிக்கிறேன்,'' எனக் கூறி ஒரு துளசியை எடுத்துக் கிருஷ்ணரை வணங்கி தியானித்தவாறே தராசுத் தட்டில் வைத்தாள். மறுநிமிடம் கிருஷ்ணர் அமர்ந்திருந்த தட்டு உயர, ருக்மிணி துளசி இலையை வைத்த தட்டு பாரத்தால் கீழே இறங்கித் தாழ்ந்தது.

நாரதர் அப்போது ''இந்தத் துளசி இலை தான் கிருஷ்ணருக்குச் சமம். எனக்கு இதுதான் வேண்டும்,'' எனக் கூறி அதனை எடுத்துக் கொண்டு கிருஷ்ணரை ருக்மிணி சத்தியபாமாவிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றார். இந்த மாதிரி கிருஷ்ணரை எடை போட்டதில் சத்தியபாமாவின் அகக் கண்கள் திறந்து கொண்டன. பணத்



தின் மீதிருந்த ஆசை ஒழிந்தது. அவள் கிருஷ்ணரைப் பக்தி சிரத்தையுடன் வழிபட்டு வரலானாள்.

சியமந்தகமணியால் கிடைத்த தங்கத்தை கிருஷ்ணர் கூறியபடி தான தர்ம காரியங்களில் சத்தியபாமா செலவிட்டாள். தந்தையின் நினைவில் அவள் பல இடங்களில் தீர்த்த யாத்திரை செய்வோர் தங்கிச் செல்ல சத்திரங்களைக் கட்டினாள். அவர்கள் சாப்பிட அங்கு ஏற்பாடும் செய்தாள். அவை சத்திராஜித்தன் நினைவில் கட்டப்பட்டதாலேயே 'சத்திரம்' என்ற பெயரும் பெற்றன. கொஞ்ச நாட்களுக்குப் பின் பலராமரும் கிருஷ்ணரும் தம் தங்கையான சுபத்திராவை அர்ஜுனனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள். அப்போது சத்தியபாமா சியமந்தக மணியை சுபத்திராவுக்கு சீதனமாகக் கொடுத்தாள். இப்படியாக சியமந்தக மணி பாண்டவர்களிடம் போய்ச் சேர்ந்தது.

சியமந்தக மணியால் கிடைத்த தங்கத்தை தருமர் தம் ராஜசூய யாகத்தில் தானம் செய்யப் பயன்படுத்திக் கொண்டார். பின்பு அவர் துரியோதனனுடன் சதுரங்கம் ஆடி அதில் தமது உடமைகளோடு துரௌபதியையும் பந்தயம் வைத்துத் தோற்றார்.

பாண்டவர்களின் புரோகிதரான தௌமியர் அவர்களிடம் ''உங்களுக்கு இந்த சியமந்தகமணியால் தான் இவ்வளவு கெடுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. அதனால் இதனைத் தூர எறிந்து விடுங்கள்,'' என்று யோசனை கூறினார்.

அர்ஜுனனும் சியமந்தக மணியை எடுத்து தரை மீது ஓங்கி அடித்தான். அந்த மணி பூமியைத் துளைத்துக் கொண்டு உள்ளே போய் மறைந்தது. பாண்டவர்கள் சூதாட்டத்தில் தோற்றதால் துரியோதனன் விதித்த நிபந்தனைகளின்படி வனவாசத்தை மேற்கொண்டு காட்டில் வசிக்கலானார்கள். அப்போது நாரதர் தருமரிடம் வந்து அவர் மீண்டும் இழந்த நாட்டைப் பெற விநாயகரைப் பூசித்து கணேச விரதத்தை மேற் கொள்ளுமாறு சொன்னார். அவரும் அவ்வாறே செய்து அஞ்ஞாத வாச காலத்தைக் கழிப்பதாகக் கூறினார்.



25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வந்த கதை




# தம்பியின் தான குணம்



தகட்டூரில் தனபாலன் என்ற பணக்காரர் இருந்தார். அவர் தான தர்மங்கள் செய்து பெரிய கொடையாளி என்று பெயர் பெற்றவர். அவரிடம் பொன்னன் என்னும் வேலையாள் சிறுவனாக இருந்தபோதே வேலையில் சேர்ந்து வீட்டு வேலைகளைச் செய்து வந்தான். ஒருமுறை தனபாலன் பொன்னனை அழைத்துக் கொண்டு அருகிலுள்ள ஒரு நகருக்குச் சென்றார். அங்கு ஒரு பொம்மைக் கடையில் பொன்னன் சந்தன மரத்தில் குடைந்து உருவாக்கப்பட்ட சிறு தேர் பொம்மையைக் கண்டு அதை அடைய ஆசைப்படவே தனபாலன் அதை வாங்கி அவனுக்குக் கொடுத்தார்.

ஒருநாள் தனபாலனின் பணக்கார நண்பர் ஒருவர் அவரது வீட்டிற்கு வந்தார். அவர் பொன்னனின் அறையில் இருந்த தேர் பொம்மையைக் கண்டு ''இது மிக அழகாக இருக்கிறதே! இதை எனக்குக் கொடுங்கள்!'' என்றார். தனபாலனும் ''இது என் தம்பி ஆசைப்பட்டு வாங்கியது. எங்கள் குடும்பமே தான தர்மத்திற்குப் பெயர் பெற்றது. என் தம்பிக்கும் அதே குணம் தான். பொன்னா! இதை இவருக்குக் கொடு!'' எனவே பொன்னனும் அதை அந்தப் பணக்காரருக்குக் கொடுத்துவிட்டான். மறு வருடமே அந்தப் பணக்காரர் தனபாலனிடம், ''உங்கள் தம்பி பொன்னனுக்கு என் மகளைக் கொடுக்கிறேன்,'' எனக் கூறவே பொன்னனுக்கும் அப்பணக்காரனின் மகளுக்கும் திருமணம் நடந்தது. பொன்னனின் தேர் பொம்மையும் சீர்வரிசையில் கிடைத்தது.

# மிஷ்கினின் அதிர்ஷ்டம்

வெகுகாலத்திற்குமுன் பாரசீக நாட்டில் மிஷ்கின் என்ற விறகு வெட்டி இருந்தான். அவனுக்கு போதிய வருமானம் கிடைக்காததால் பல நாட்கள் அவனும் அவன் மனைவியும் மகள் யாஸ்மினும் பட்டினி கிடக்க வேண்டியும் வந்தது. ஒருநாள் யாஸ்மின் சாப்பிட இன்று என்ன கிடைக்கும் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது எங்கிருந்தோ மாமிசத்தை நன்கு பக்குவப்படுத்தும் வாசனை வந்து அவள் மூக்கைத் துளைத்தது. அங்கு சாப்பாட்டு வேளையின்போது போனால் தனக்குக் கொஞ்சம் கிடைக்கும் என்று அவள் எண்ணி அந்த வீட்டிற்குச் சென்றாள்.

அவள் அந்த வீட்டு எஜமானியிடம் ''எங்கள் வீட்டில் கடுகு இல்லை. கொஞ்சம் இரவல் கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டவாறே உள்ளே எல்லோரும் சாப்பிட உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். அதை கவனித்த வீட்டு எஜமானி ''நீ கடுகுக்காக வரவில்லை. எதற்கு வந்தாய் என்று எனக்குத் தெரியும். இங்கு உனக்குக் கொடுக்க எதுவும் கிடையாது. போ, போ!'' என்று கூறி வெளியே விரட்டிவிட்டு வாசல் கதவை மூடித் தாளிட்டுக் கொண்டு போய்விட்டாள்.



அவமானம் தாங்க மாட்டாமல் அவள் தன் வீட்டிற்கு வந்து மாலை ஆகியும் கூட அழுது கொண்டே இருந்தாள். இருட்டும்போது வீட்டிற்கு வந்த மிஷ்கின் தன் மகள் கண்ணீர் வடிப்பதைக் கண்டு அதன் காரணத்தைக் கேட்டான். அவளும் தனக்கு நேர்ந்த அவமானத்தை விவரித்தாள். அவனும் அவளுக்கு ஆறுதல் கூறி ''நாளையே உனக்கு நல்ல மாமிச உணவு கிடைக்கச் செய்கிறேன்,'' என்றான். மறுநாள் விடியற்காலையிலேயே எழுந்து காட்டிற்கு விறகு வெட்ட அவன் சென்றான். ஆனால் அன்று காட்டில் தீப்பிடித்துவிட்டதால் அவனால் விறகு வெட்ட முடியவில்லை. வெறுங்கையுடன் அவன் வீட்டிற்கு வந்தான்.

காட்டுத் தீ அணைய ஐந்து நாட்களாயின. அந்த ஐந்து நாட்களிலும் மிஷ்கினின் குடும்பம் பட்டினி கிடந்தது. ஆறாவது நாள் அவன் காட்டிற்கு விறகு வெட்டப் போனபோது

அங்கே ஒரு மரம் கூட இருக்க வில்லை. அவன் என்ன செய்வது எனத் தெரியாமல் இடிந்துபோய் உட்கார்ந்துவிட்டான். அப்போது ஆகாயத்தில் சில தேவபுருஷர்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் மிஷ்கின் கவலை யுடன் இருப்பதைக் கண்டு மனம் இரங்கி அவன் முன் போய் நின்று ''உனக்கு என்ன கவலை?'' என்று கேட்டார்.

மிஷ்கினும் ''என் குடும்பத்திற்கு உணவு கூட என்னால் அளிக்க முடிய வில்லையே!'' என்று சொல்லித் தன் நிலைமையை விளக்கினான். அப் போது தேவபுருஷன் ஒரு பிடி மண் எடுத்து மிஷ்கினிடம் கொடுத்து ''இதை பத்திரமாக வைத்திரு. உன் நிலை மாறும், அப்போது தான தர்மங்கள் செய்து தெய்வத்தை யும் வழிபட்டு வா!'' எனக் கூறி மறைந்தார். மிஷ்கினும் தன் வீட்டிற்குப் போய் அந்த மண்ணை ஓரிடத்தில் பத்திரமாக மறைத்து வைத்தான். மறுநாள் அந்த மண் வைக்கப்பட்ட இடத்தின் மேல் பல வைர, மாணிக்கக் கற்கள் ஒளிவிட்டுக் கொண்டிருந்தன.

மிஷ்கின் அவற்றில் ஒன்றை எடுத்துக் கொண்டு போய் ஒரு வைர வியாபாரியிடம் காட்டி அதன் மதிப்பு என்ன என்று கேட்டான். அவன் அது லட்சம் தங்கக் காசுகள் பெறும் எனக் கூறி அவனே அந்தப் பணத்தைக் கொடுத்து அதை விலைக்கு வாங்கிக் கொண்டான். மிஷ்கின் மகிழ்ந்து




போனான். அப்போதே அவன் நிலை மாறிவிட்டது. அவனது குடும்பம் வசதியுடன் வாழ்ந்தது. மிஷ்கின்அந்த மண்ணை வைத்த இடத்தில் இருந்த மற்ற விலையுயர்ந்த வைரக் கற்களை விற்று நிறையப் பணம் அடைந்தான். ஆனால் அதற்காகக் கர்வப்படாமல் அந்த தேவபுருஷர் கூறியபடி தெய்வ வழிபாடு செய்தும் தானதர்மங் களைச் செய்தும் வரலானான்.

அவன் பெரிய மாளிகையைக் கட்டி அதில் தன் குடும்பத்தோடு வசதியுடன் வாழ்ந்து வரலானான். அவன் தன்னைக் கைதூக்கி விட்ட தேவபுருஷரைப் பூசித்து தினமும் அவரது புகழ் பாடி வரலானான். இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் அவன் தன் மகள் யாஸ் மினிடம் ''மகளே! நான் நாளைக்கு



புனித யாத்திரையை மேற்கொள்ளப் போகிறேன். நான் திரும்பி வரும் வரை தேவபுருஷரை வழிபட்டு வா. தினமும் பூஜை முடிந்ததும் பழங் களையும் மற்ற பிரசாதங்களையும் ஏழை எளியவர்களுக்கு விநியோ கித்து வா!'' என்றான். அவளும் அவ் வாறே செய்து வருவதாகக் கூறினாள்.

ஆனால் முன் வாழ்ந்த ஏழை யாஸ்மின் அல்ல, பணக்காரி. எனவே அவளது போக்கில் மாறுதல் ஏற் பட்டது. அரசகுமாரியின் சிநேகிதம் வேறு அவளுக்குக் கிடைத்தது. அத னால் அவள் அரசகுமாரியுடன் சேர்ந்து பல இடங்களுக்குச் சென் றாள். இதனால் அவள் தன் தந்தை யிடம் கூறியபடி நடக்கவில்லை. தேவபுருஷருக்குப் பூஜை தினமும் செய்யவில்லை. தன் தந்தை கூறிய படி தேவபுருஷரை வழிபடாததோடு அவருக்குப் படைக்க வேண்டிய வற்றையும் ஏழை எளியவர்களுக்கு தானமாகக் கொடுக்கவும் இல்லை.

ஒருநாள் அவள் அரசகுமாரியுடன் ஓர் அழகிய குளத்திற்குச் சென்றாள். அரசகுமாரி அவளிடம் ''வா! இதில் குதித்து நீந்தி விளையாடலாம்,'' என்றாள். யாஸ்மினோ ''எனக்கு நீந்தத் தெரியாது. வேண்டுமானால் நீ இதில் இறங்கிக் குளித்துவிட்டு வா. அதுவரை நான் குளக்கரையில் உட்கார்ந்திருக்கிறேன்,'' என்றாள். அரசகுமாரி தன் நகைகளைக் கழற்றிக் கரையில் வைத்துவிட்டுக் குளத்தில் இறங்கிக் குளிக்கலானாள்.

குளக்கரையிலிருந்த யாஸ்மின் மெல்லிய இளம்காற்று வீசவே உட்கார்ந்தபடியே தூங்கிவிட்டாள். அப்போது ஒரு பறவை வந்து அரச குமாரியின் நவரத்தின மாலையைக் கவ்விக் கொண்டு எங்கோ பறந்து போய்விட்டது. யாஸ்மினுக்கு அது தெரியவில்லை.

குளித்துவிட்டு வந்த அரசகுமாரி தன் நவரத்தின மாலை இல்லாதது கண்டு திகைத்தாள். பிறகு அவள் யாஸ்மின் தான் அதைத் திருடி விட்டாள் என்று குற்றம் சாட்டினாள். யாஸ்மின் தான் திருடவில்லை எனக் கூறியும் அரசகுமாரி தன் தந்தையிடம் புகார் செய்தாள். மன்னனும் யாஸ் மினைத் திருடி எனத் தீர்மானித்து அவளையும் அவளது தாயையும்

சிறையில் அடைத்து வைத்தான். புனித யாத்திரையிலிருந்து திரும்பி வந்த மிஷ்கின் தன் வீட்டில் யாரும் இல்லாததைக் கண்டு அக்கம் பக்கத்தில் உள்ளவர்களிடம் விசாரித் தான். அவர்களும் நடந்ததைக் கூறவே, அவன் நேராக மன்னன் முன் போய் அவனது கால்களில் விழுந்து ''என் மனைவியையும் என் மகளை யும் விடுதலை செய்யுங்கள். அவர் களுக்குப் பதிலாக என்னைச் சிறை யில் அடையுங்கள்,'' என்று கெஞ்சி னான். மன்னனும் மனம் இரங்கி அவ்வாறே செய்தான். மிஷ்கினை இரும்புச் சங்கிலியால் பிணைத்து ஒரு கம்பத்தில் கட்டி வைத்தான்.

மிஷ்கின் தான் வழிபடும் தேவ புருஷரைத் துதித்தான். அன்றிரவு அவர் அவன்முன் தோன்றி ''இது வரை எனக்குப் பூஜை நடக்க வில்லை. அதற்குக் காரணம் உன் மகளே. அதற்கான தண்டனையை அனுபவித்துவிட்டாள். நாளைக் காலையில் இந்த இரும்புச் சங்கிலி தானாகவே அறுபட்டுவிழும். அதன் பின் இந்தக் கம்பத்தின் பக்கத்தில் பணம் இருக்கும். அதைக் கொண்டு நீ வழக்கம் போல பூஜை செய்து தான தர்மங்களையும் செய். உன் கஷ்டங் கள் எல்லாம் மறைந்துவிடும்,'' என்று கூறி மறைந்தார்.

மிஷ்கினும் விடியும்வரை தேவ புருஷனை தியானித்துக் கொண்டே இருந்தான். காலை ஆகியது. இரும் புச் சங்கிலி அறுந்து விழுந்தது. கம்பத்தின் பக்கம் பணம் இருந்தது. அதை எடுத்துக் கொண்டு சிறைச் சாலையின் ஜன்னலின் பக்கம் போய் நின்றான். அப்போது தெருவில் ஒரு வன் போகவே, மிஷ்கின் அவனைத் தன்னருகே வரச் சொல்லி அவனிடம் பணத்தைக் கொடுத்து ''இதற்கு நீ பழங்களும் மலர்களும் வாங்கிக் கொண்டு வந்து கொடு. நான் பூஜை செய்ய வேண்டும். இந்த உதவியைச் செய்தால் உனக்குப் புண்ணியம் கிடைக்கும்,'' என்றான். வழிப் போக்கனும் அவன் வேண்டியபடி பணத்தை வாங்கிக் கொண்டுபோய் பழங்களையும் மலர்களையும் வாங் கிக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தான். மிஷ்கின் தேவபுருஷ னுக்குப் பூஜை செய்து பழங்களை அந்த வழிப்போக்கனிடம் கொடுத்து அவன் வழியில் காண்பவருக்கு



எல்லாம் கொடுத்துக் கொண்டே போகும்படிக் கூறினான். அவனும் அதைச் செய்தான்.

அன்று மாலை மன்னன் தன் குடும்பத்தவருடன் அரண்மனைப் பூங்காவிற்குச் சென்றான். அப்போது அங்கு பறந்து வந்த ஒரு பறவை அரசகுமாரியினுடைய நவரத்தின மாலையை அவனது மடியில் போட்டது. அப்போதுதான் எல்லோருக்கும் யாஸ்மின் நவரத்தின மாலையைத் திருடவில்லை என்பது தெரிந்தது. மன்னன் தான் செய்த தவறுக்கு வருந்தி மிஷ்கினை உடனே சிறையிலிருந்து விடுதலை செய்தான்.

அவன் மிஷ்கினிடம் ''நான் தவறுதலாக எண்ணி உன்னையும் உன் குடும்பத்தினரையும் துன்புறுத்தி விட்டேன். அதற்காக வருந்துகிறேன். நான் செய்த தவறுக்குப் பரிகாரமாக உன் மகளுக்கு என் மகனைத் திருமணம் செய்து வைக்கிறேன். உன் போன்ற பக்திமானின் குடும்பத்தில் நான் சம்பந்தம் செய்து கொள்வதை என் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்,'' என்றான்.

மிஷ்கின் அடைந்த மகிழ்ச்சியை விவரிக்கத் தான் முடியுமா? அவனும் மன்னனிடம் ''நான் தேவபுருஷரின் அருளால் நிறையப் பணம் அடைந்தேன். அவர் கூறியபடி அவரை வழிபட்டு வந்ததோடு அவருக்குப் படைத்த பொருள்களையும் மற்றும் பலவற்றையும் ஏழை எளியவர்களுக்குத் தானம் செய்து வந்தேன். ஆனால் நான் ஊரில் இல்லாதபோது என் மகள் நான் சொல்லிவிட்டுப் போனபடிதேவபுருஷரை வழிபட்டு வரவும் இல்லை. தான, தர்மங்களைச் செய்யவும் இல்லை. அதன் பலனை அனுபவித்தும் விட்டாள். இப்போது அந்த தேவபுருஷர் என் வழிபாட்டால் என் குடும்பத்தை நல்ல நிலைக்குக் கொண்டு வந்துவிட்டார்,'' என்றான்.

அரசகுமாரனுக்கும் யாஸ்மினுக்கும் திருமணம் வெகுவிமரிசையாக நடந்தது.





# தலை வணங்கினார்!

சிவபுரியும் நவபுரியும் அண்டை நாடுகள். சிவபுரி செழிப்பானது. மூன்று சிறு நதிகள் பாய்ந்து அதைப் பச்சைப்பசேலென்று இருக்கச் செய்தன. ஆனால் நவகிரி வறட்டுப் பிரதேசம். பருவ மழை கூடச் சரியாக அங்கு பெய்வது இல்லை. சிவபுரி மக்கள் சுக ஜீவிகள் என்றால் நவபுரி மக்கள் உடல் உழைப்பால் நாட்டின் பெருமையை நிலைநாட்டி வந்தார்கள். நவகிரி மன்னன் நரசிம்மவர்மனும் நன்கு ஆட்சி புரிந்து வந்தான்.

இந்நிலையில் சிவகிரியின் ஆஸ்தான பண்டிதர் சிங்கராயர் நவகிரி மன்னனைக் காண வந்தார். அவர் நரசிம்மவர்மனிடம் ''எங்கள் நாடு மிகவும் செழிப்பானது. மக்கள் சிரமப்படாமல் வாழ்க்கை நடத்துகிறார்கள். பல கலைகளில் சிறந்து விளங்குகிறது. இசை, நாட்டியம் என்று எங்கும் பரவிக் கிடக்கிறது. இலக்கியத்திலோ கொடி கட்டிப் பறக்கிறது. அறிவும் ஆற்றலும் கொண்டவர்கள் எம் நாட்டு மக்கள்,'' என்று அடுக்கிக் கொண்டே போனார்.

நரசிம்மவர்மனும் ''பேஷ். பல விஷயங்களில் உங்கள் நாடு முன்னேற்றம் கண்டுள்ளது கேட்டு மகிழ்கிறேன். ஆனால் கல்வி கேள்விகளிலும் அறிவு ஆற்றலிலும் என் நாட்டு மக்கள் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல!'' என்றான்.

அதைக் கேட்ட சிங்கராயர், ''இதை நிரூபிக்க முடியுமா?'' என்று சற்று ஆவேசப்பட்டுக் கேட்டார். அப்போது நரசிம்மவர்மனின் ஆஸ்தான பண்டிதரான ரங்கராயர் ''ஏன் முடியாது? நீங்களே எங்கு வேண்டுமானாலும் எம் நாட்டிற்குள் போய் யாரை வேண்டுமானாலும் பரீட்சித்து பாருங்கள். அப்போது தெரியும் எங்கள் பெருமை!'' என்றார்.

சிங்கராயரும் ''சரி. நாளையே பரீட்சித்துப் பார்க்கிறேன்,'' என்றார்.

- சிவனார் செல்வன் -




மேலும் எல்லோரும் அந்த மாதிரி வேலைகளைத் தேடிக் கொண்டு வெளியூர் போய்விட்டால் இங்கே இந்த மாதிரி வேலைகளை எல்லாம் யார் செய்வதாம்?'' என்று கேட்டான்.

அவரும் ''சங்கா! எனக்கு மூன்று கேள்விகளுக்கு விடை தெரிய வில்லை. உன்னால் சொல்ல முடியுமா?'' என்று கேட்டார். அவனோ, ''நீங்கள் பெரும் பண்டிதர். உங்களுக்குத் தெரியாத விடைகளை என்னால் சொல்ல முடியும் என்றா நினைக்கிறீர்கள்? சரி, கேளுங்கள். முடிந்தவரை கூறுகிறேன்,'' என்றான்.

அவரும் ''பூக்களில் சிறந்தது எது? நீரில் சிறந்தது எது? ஒளியில் மேலானது எது?'' என்று கேட்டார். சிறுவனும் ''தாமரைப் பூ, ஆற்று நீர், சூரிய ஒளி. இவை முறையே உங்கள் கேள்விகளுக்கான விடைகள்,'' என்றான்.

மறுநாள் அவர் தலைநகருக்குப் பக்கத்திலுள்ள ஒரு கிராமத்திற்குச் சென்றார். அங்கு மாடு மேய்க்கும் சிறுவன் ஒருவன் புளியங்காய்களைப் பறித்துக் கொண்டிருப்பதை அவர் கண்டார். அவனிடம் அவர் ''உன் பெயர் என்ன? என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார். அவனும் ''என் பெயர் சங்கன். நான் புளியங்காய் பறித்துக் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியவில்லையா?'' என்று கேட்டான்.

அது கேட்ட அவர் ''வெயிலில் இப்படி சிரமப்பட்டு ஏன் வேலை செய்கிறாய்? நிழலில் உட்கார்ந்து செய்யக் கூடிய வேலை ஏதாவதைச் செய்யக் கூடாதா?'' என்று கேட்டார். அதற்கு அவன் ''எழுதப் படிக்கத் தெரியாத எனக்கு யார் அப்படிப்பட்ட வேலையைக் கொடுப்பார்கள்?

சிங்கராயரும், ''பேஷ். நீ அதிகம் படிக்காதவனாக இருந்தாலும் என் கேள்விகளுக்குச் சரியான விடைகளைக் கூறிவிட்டாயே! திருமகளும் கலை மகளும் தாமரைப் பூவில் வசிப்பதால் அது சிறந்தது. சிவனார் தலையில் கங்கை இருப்பதால் ஆற்று நீர் சிறந்தது. வெளிச்சங்களுக்கு எல்லாம் ஆதாரம் சூரிய ஒளி. இக்காரணங்களாலே பதில் அளித்தது கண்டு நான் மிகவும் மகிழ்வதோடு உன்னைப் பாராட்டுகிறேன்,'' என்றார்.

சிறுவனோ சிரித்துக் கொண்டு ''இந்த விடைகளை எல்லாம் இந்நாட்டில் சர்வசாதாரணமாக எல்லோ

ரும் கூறிவிடுவார்களே! ஆனால் உண்மையில் நான் கூறியது சரியான விடைகளே அல்ல,'' என்றான்.

அதைக் கேட்ட சிங்கராயர் வியப்புடன் ''இக்கேள்விகளுக்கு இன்னமும் மேலான விடைகள் உள்ளனவா?'' என்று கேட்டார்.

சிறுவனும் ''ஆமாம். பூக்களில் சிறந்தது பருத்திப்பூ. ஏனெனில் அது மனிதர்களின் மானத்தைக் காக்க ஆடையாகப் பயன்படுகிறது. ஆனால் தாமரைப் பூவோ பறித்த பின் மறுநாளே வாடிப் போய்விடும். அடுத்து நீரில் சிறந்தது பாலைவனத்தில் கிடைக்கும் நீர். அது அங்கு தண்ணீருக்காக தவிப்பவர்களின் உயிரைக் காக்கிறது. ஒளிகளில் சிறந்தது கருணை உள்ளம் படைத்தவர் பார்க்கும் கண்ணின் ஒளி. இந்த ஒளியால் துயரத்தில் மூழ்கிக் கிடப்பவர்கள் யாவரும் அவற்றிலிருந்து விடுபட்டு சுகத்தை அடைகிறார்கள். இவை தாம் நீங்கள் கேட்ட கேள்விகளின் சரியான விடைகள்,'' என்றான்.

சிங்கராயர் தலைகுனிந்தவாறே ''ஆகா! என்ன அறிவு! எவ்வளவு ஆற்றல்!! ஆம், பருத்திப்பூ தான் வெடித்து, பஞ்சைக் கொடுத்து ஆடைகளைத் தயாரிக்க உதவுகிறது. தாமரைப்பூ மலர்ந்த மறுநாளே வாடிவிடும். பாலைவனத்தில் உயிர் காக்கும் நீரே உயர்ந்தது. அதுபோல மனம் இரங்கிப் பார்ப்பவரின் ஒளியால் பிறரது துயரம் போகிறது. இவ்வளவு அறிவுமிக்க பதில்களை நான் இந்நாட்டில் எதிர்பார்க்கவில்லை. அதிகம் படிக்காத நீயே இப்படி அறிவு மிக்கவனாய் விடைகளைக் கூறினாயே! உண்மையிலேயே இந்நாடு உழைப்பால் உயர்ந்ததே!'' எனக் கூறித் தலை வணங்கினார்.




அம்புலிமாமாவின்
அன்பளிப்பு
வீர தீர பராக்கிரமன்
23
ஓவியம் : பாணி
மக்கள் ஆதரவும் மன்னனின் ஆசியும் பெற்ற ஆதித்தன் துரோகிகளான நரேந்திரதேவனையும் ரவீந்திரதேவனையும் அடக்க தாந்திரீகன் வாழும் சர்ப்ப தேசத்தை அடைந்து தன் வீரர்களை அப்பகுதியைப் பற்றி அறிந்துவர அனுப்பினான். அவர்கள் மலைச்சாதி தம்பதிகளைப் பிடித்து வந்தனர். அவர்கள் தாந்திரீகன் நாகபந்துவைப்பற்றிய சில விவரங்களை அளித்தார்கள். நரேந்திரதேவன் மலைச் சாதித் தலைவன் வழிகாட்ட நாட்டிற்குச் செல்ல படகில் ஏறி ஆற்றைக் கடக்கலானான்.


படகில் உணவு மற்றும் பல வசதிகள் செய்யப்பட்டிருந்தது கண்டு நரேந்திர தேவனும் அவனுடன் இருந்தவர்களும் மகிழ்ந்து போனார்கள். உண்டு, குடித்து, ஆடிப்பாடினார்கள்.
ஆதித்தனின் தொல்லை நமக்கு இனி இராது.
அவன் மட்டும் அறுபதாவது பலி என்று ஆகிவிட்டால் தாந்திரீக னுக்கு அபூர்வ சக்தி கிடைத்துவிடும்.


நிலவின் குளிர்ச்சி, இளம் காற்று, படகோட்டிகளின் பாடல்கள் இவை படகிலுள்ளவர்களைத் தூங்க வைத்தன.
விடிவதற்குள் நம் இடத்தை அடைய வேண்டும்.

விடியும்போது ஆதித்தனும் அவனது ஆட்களும் அந்தப் படகைப் பார்த்து விட்டார்கள். படகோட்டிகள் எச்சரிக்குமுன் அவர்கள் தீப்பந்தங்களை அதன் மீது எறிந்து அம்புகள் எய்தனர்.

தலைவனின் படகு தப்பி விட்டது!

படகோட்டிகள் எங்கே?

சேனாதிபதியைக் காப்பாற்றுங்கள்.

நரேந்திரதேவனும் அவனது ஆட்களும் தப்பவும் முடியவில்லை. எதிர்க்கவும் முடியவில்லை. தீப்பந்தங்களிலிருந்து தப்ப படகோட்டிகள் ஆற்றில் குதித்தார்கள். முதலைகள் அவர்களை அணுகின.

தீப்பந்தங்கள்! யார் எறிகிறார்கள்?

உங்கள் படகோட்டிகள் எங்கே?

ஐயோ! தீ என்னை வாட்டுகிறதே! காப்பாற்று!

ஐயோ! முதலைகள், ஒழிந்தோம்!

நரேந்திரதேவனும் மலைச்சாதித் தலைவனும் திகைத்தனர். தீப்பந்தங்களால் பயந்த படகோட்டிகளால் படகைச் சரியாகச் செலுத்த முடியவில்லை. அது ஒரு பாறை மீது மோதி கவிழ்ந்தது.

தலைவா! இனி என்ன செய்யலாம்?

ஆற்றில் குதித்து நீந்தி கரை சேர வேண்டியது தான். வேறு வழியில்லை, சேனாதிபதியாரே!

ஐயோ! முதலை என் காலைக் கடிக்கிறதே!

கவிழ்ந்த படகை நீரோட்டம் கரைக்குக் கொண்டு போயிற்று.

சேனாதிபதியாரே! நான் இங்கே இருக்கிறேன். படகை கெட்டியாகப் பிடியுங்கள்.

முதலைகள் மலைச் சாதித் தலைவனைக் கடித்துக் குதறி விழுங்கின. அப்பகுதி நீர் சிவப்பாகிவிட்டது.

எப்படியோ இவரைக் காப்பாற்றி விட்டோம்.

இவரது கால் இல்லையே! ஒரு கை கூடப் போய் விட்டதே!

இவர் நினைவு இழந்து கிடக்கிறாரே!

நினைவு பெற்ற நரேந்திரதேவன் மிகவும் மனம் வருந்தினான்.

நான் பல பாவங்களைச் செய்தேன். நான் ஒரு துரோகி. என்னைக் காப்பாற்ற வேண்டாம். கொன்றுவிடுங்கள்!

அவருக்கு நம் கூடாரத்தில் சிகிச்சை அளியுங்கள். மற்றவர்கள் வரும்வரை நாங்கள் இங்கேயே இருக்கிறோம்.

கலகம் செய்த மலைச்சாதியினர் நெருப்பு மூட்டி அதனைச் சுற்றி ஆடிப்பாடினார்கள்.

தொடரும்

# கேளிக்கை நேரம்

## முனகும் கன்று

பாவம்! இந்தக் கன்று தன் தாய்ப் பசுவைப் பிரிந்து தவித்துக் கொண்டு நிற்கிறது. பசு ஓரிடத்தில் கட்டப்பட்டிருக்கிறது. கன்று பத்திரமாகப் போய்த் தாய்ப் பசுவை அடைய வேண்டும். தடி வைத்துள்ள தடியனைத் தவிர்த்து அது செல்வதற்கு நீங்கள் வழிகாட்டுங்கள்!





# ஜாக்கியின் ஜோக்

ஜாக்கி மிக்க மகிழ்ச்சியுடன் தன் தம்பி ஜோன்டியுடன் விளையாடிக் கொண்டிருக்கிறது. இந்தக் காட்சியை அழகுபடுத்த நீங்கள் ஏற்ற வண்ணங்களைத் தீட்டிப் பார்க்கிறீர்களா?

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*

# ஒட்டகத்துள் ஒளிந்துள்ளவை

இந்த ஒட்டகம் நீண்ட பயணத்தால் களைத்துப் படுத்திருப்பது போலத் தானே தெரிகிறது. இந்த ஒட்டகப் படத்தை கவனித்துப் பார்த்தால் அதனுள் பல மிருகங்கள் இருப்பதைக் காணலாம். அவை யாவை எனக் கூறுங்கள்.






# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஏப்ரல் 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

**வாழ்த்துக்கள்!**

டிசம்பர் 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**என். கீதா நாராயணன்,**
22, இந்திரா நகர், பி.கே.புதூர்,
குனியமுத்தூர்,
கோயமுத்தூர் - 641 008.

பரிசு பெற்ற வாக்கியங்கள்



பால் வேணுமா? குடிச்சுக்கோ!
பழம் வேணுமா? எடுத்துக்கோ!

கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)



முனகும் கன்று



ஒட்டகத்துள் ஒளிந்துள்ளவை

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

# JUNIOR CHANDAMAMA

SPECIALLY DESIGNED FOR CHILDREN BELOW 9 YEARS

Good news parents and teachers!

We are happy to introduce **JUNIOR CHANDAMAMA,** a new magazine for your tiny tots.

From April 2003 onwards, **JUNIOR CHANDAMAMA** will entertain your tiny tots month after month with many pages of fun and learning.

This magazine will present a package of contests, activities, and puzzles specially designed for children up to the age of 9.

The magazine will endeavour to impart both global and traditional Indian values to children through little stories and activities.

At Rs. 10 per copy, and an annual subscription at Rs. 120, **JUNIOR CHANDAMAMA** promises to be easy on your monthly budgets, too!

As a pre-launch discount offer, an annual subscription of **JUNIOR CHANDAMAMA** will be offered to you at Rs.100/- instead of Rs.120/- for a limited period only.

We hope you will avail this offer.

Those interested can write to us with your name and address for a free sample copy of the introductory issue of **JUNIOR CHANDAMAMA.**



